








32 GLASS PACK

NEW REFRESHING

# Rasna

soft drink concentrate

6 GLASS PACK

பரீட்சைனு எனக்கு
எவ்வளவு ஆனந்தம்னு
உங்களுக்குத் தெரியுமா ?
ஏன்னு, நான் ரொம்ப
படிச்சேன்னு, அம்மா
எனக்குத் தருவாங்க...
அத்தனை ரஸ்னு. ஆமா !
எனக்குப் பிடிச்ச
ரஸ்னுவை !






I love you Rasna

ஆரஞ்சு ▪ பைனப்பிள் ▪ லேம் ▪ ஷாஹி குலாப் ▪ காலா கட்டா ▪ கூல் கஸ்
▪ கேசர் இலாய்ச்சி ▪ மசாலா சோடா (ஜல் ஜீரா) ▪ டூட்டி ஃப்ரூட்டி ▪ மேங்கோ ரைப்

* தேர்ந்தெடுக்கப்பட்ட நகரங்களில் மட்டுமே கிடைக்கும்

முதன் முதலாக
IS:13019



அங்கீகரிக்கப்பட்ட
ஸாஃப்ட் ட்ரிங்க்
கான்சென்ட்ரேட்.
பி.வி.ஒ.
கிடையாது.

Mudra:A:EAMR:5482 Tam

# மாங்கை

ஏப்ரல் 1991

## தமிழ்ப் புத்தாண்டு இதழில்...

பஞ்சாங்கம் எப்படித் தயாரிக்கப்படுகிறது?

சபரிமலைக்கு எல்லாப் பெண்களும் செல்லலாம்

(குருசாமி) எம். என். நம்பியார் சொல்கிறார்!

புத்தாண்டுக் கவிதைகள்

மனைவி தந்த ஊக்கத்தால் மகத்தான வெற்றி

பண்டிகைக்கால சிறப்பு உணவுத் தயாரிப்புகள்



மற்றும் வழக்கமான சிறப்பு பகுதிகள்

விலை ரூ 4/-

TA—F-1



# அம்புலிமாமா

**ஏப்ரல் 1991**



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ. 3-00.**

**வருட சந்தா ரூ. 36-00.**




# மேகி கிளப் பரிசுகள், இலவசம். வனவிலங்குகளுடன் பெறுவீர், உல்லாசம்!

குழந்தைதளே! மேகி கிளப்பில் சேருங்கள். வருடம் பூராவும் கொண்டாட்டம் பெறுங்கள். நியூஸ் லெட்டர்கள், பரிசுகள், விளையாட்டுகள் இன்னும் நீங்கள் செய்வதற்கு எத்தனை எத்தனயோ!

இந்த சின்னத்தை மேகி நூடுல்ஸ் 5 காலி உறைகளின் முன்பக்கத்திலிருந்து வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள். உங்கள் பெயர், விலாசத்துடன் உங்களுக்குப் பிடித்த பரிசையும் குறிப்பிட்டு எழுதுங்கள். நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால் உறுப்பினர் எண்ணையும் குறிப்பிட மறந்துவிடாதீர்கள். இதுவரை உறுப்பினர் ஆகவில்லை என்றால் இப்போது ஆகலாம்.

மேலே குறிப்பிட்ட விவரங்களை அனுப்பும்போது, உறுப்பினர் ஆக விரும்புவதாகவும் எழுதுங்கள். நாங்கள் உங்கள் பரிசுப் பொருளுடன் இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் அனுப்புவோம்.

எங்கள் விலாசம் :
மேகி கிளப்
தபால்பெட்டி எண் : 5788,
புது டில்லி-110 055.



மேகி "ஆபரேஷன் வைல்ட்லைஃப்" விளையாட்டில் வன விலங்குகளைக் காப்பாற்றுங்கள்!



மேகி "ஜாது ஜங்கிள்" மூலம் சொந்தமாக ஒரு காட்டை உருவாக்குங்கள்!




ஆர்ச்சி காமிக்




மேகி "கிங் ஆஃப் தி ஜங்கிள் கேம்" விளையாட்டில் வனத்தை வெல்லுங்கள்!




மேகி "பர்ட்ஹவுஸ்" உருவாக்குங்கள்!



மேகி வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ் வினாடி வினா! நீங்கள் பெறும் ஒவ்வொரு 3 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு மேகியின் "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" வினாடி வினாவை உங்களுக்கு நாங்கள் அனுப்புவோம். அதில் வன விலங்குகளைப் பற்றிய வியப்பூட்டும் தகவல்கள் நிறைந்துள்ளன. விளையாட்டில் விவரங்கள் தரப்பட்டுள்ளன.









மேலும் பெறுவீர்: இதுவரை "லாஸ் ஆஃப் ஜங்கிள் கேம்" நீங்கள் பெறவில்லையென்றால், இப்போது பெற்றுக்கொள்ளுங்கள்!

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## போர் அன்றும் இன்றும்

பண்டைக் காலத்திலிருந்து போர்கள் நடந்து வருவதாக மனித வரலாறு கூறுகிறது. ஆனல் அந்நாட்களில் நடந்த போர்களுக்கும் இந்நாட்களில் நடக்கும் போர்களுக்கு மிடையே பெருத்த வித்தியாசம் உள்ளது. முன் காலத்தில் போரில் ஒரு தரப்பினருக்கு வெற்றி. எதிர்த்தரப்பினருக்குத் தோல்வி. போரின் விளைவுகள் அந்த இரு தரப்பினரை மட்டுமே பாதித்தன. ஆனல் இப்போதோ வெற்றி தோல்வி எப்படி இருந்தாலும் போரின் விளைவுகள் உலகம் முழுவதையும் பயங்கரமாக பாதிக்கின்றன. குறிப்பாகப் போரில் உபயோகப்படுத்தப்படும் மரண ஆயுதங்கள், படைகளின் அமைப்புகள், போர்முறைகள் ஆகியவை காற்றையும் நீரையும் மாசுபடுத்தி இந்தப் பூவுலகை மனிதன் வாழ ஏற்ற இடமாக இல்லாமல் செய்து விடுகின்றன. மனிதனின் இந்தக் கொடிய செயலால் பறவைகளும் மிருகங்களும் அடியோடு அழிகின்றன.

இப்படிப்பட்ட பயங்கரப் போர்தான் தற்போது பாரசீக வளைகுடாப் பகுதியில் நடந்து கொண்டிருக்கிறது. மனிதத் தன்மைக்கே விரோதமான இம்மாதிரி சம்பவங்கள் மீண்டும் தலைதூக்கக் கூடாது என்பதே நம் விருப்பம்.

மதிமுகம்: 88 ஏப்ரல் 1991 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 3-00 வருட சந்தா: ரூ. 36-00






# இஸ்ரேல் மீது ஏன் படை எடுப்பு?

ஈராக் தன் அண்டை நாடான குவைட்டை ஆக்கிரமித்ததன் பயனாக பாரசீக வளைகுடாப் பகுதியில் போர் மூண்டு விட்டது. குவைட்டை விட்டு வெளியேறுமாறு ஈராக்கை ஐக்கிய நாடுகள் சபை முதலில் கோரியது . பிறகு அவகாசமும் அளித்தது. ஆனால் ஈராக் அதற்குச் சம்மதிக்கவில்லை. அதனால் நேச நாடுகளின் படைகள் அமெரிக்காவின் தலைமையில் ஈராக்குடன் போர் புரிய வேண்டியதாகி உள்ளது.

போர் அறிப்பானதுமே ஈராக் ஒருபுறம் அமெரிக்கத் தலைமையில் இயங்கும் நேசநாடுகளின் படைகளை எதிர்த்தும் மறுபுறம் இஸ்ரேல் மீது ஏவுகணைப் போரைத் தொடுத்தும் விட்டது. இஸ்ரேல் ஈராக்கிற்கு எதிராக தன் படைகளை நேசநாடுகளின் படைகளோடு சேர்த்து அனுப்பவில்லை. அப்படி இருந்தும் ஈராக் இஸ்ரேலைத் தாக்கியது ஏன்?

இஸ்ரேல் யூதர்களின் நாடு. ஆயினும் பல நூற்றாண்டுகளாக யூதர்கள் தம் நாட்டிலிருந்து தொலை தூரத்தில் வாழவே நேரிட்டது. இரண்டாவது உலகப் போரின்போது யூதர்களின் நிலை மேலும் மோசமாகிவிட்டது. ஹிட்லரின் கட்டளைப்படி நாஜிகளால் ஆயிரக் கணக்கான யூதர்கள் கொல்லப் பட்டார்கள். இரண்டாவது உலகப் போர் முடிந்ததும் ஐக்கிய நாடுகள் சபை பாலஸ்தீனத்தில் யூதர்களுக்கும் அராபியர்களுக்கும் அவரவர் நாடுகளின் எல்லைகளை வரையறுத்துக் கொடுத்தது. 1948 மே மாதம் 14ந் தேதி இஸ்ரேல் நாடு நிறுவப்பட்டது. ஆனால் மறுநாளே அதன் எல்லையில் எகிப்து, ஈராக், ஜோர்டான் லெபனன், சிரியா ஆகிய நாடுகளின் படைகள் ஒன்றாகப் படை எடுத்தன. ஆனால்

இஸ்ரேல் துணிவுடன் அவற்றை எதிர்த்து விரட்டியதோடு அராபியப் பகுதியில் ஒரு சிறு பாகத்தையும் கைப்பற்றியது. அதே சமயம் ஜோர்டானுக்கு தன் நாட்டின் ஒரு சிறு பகுதியையும் எகிப்திற்கு காஜாப் பகுதியையும் இஸ்ரேல் இழந்து விட்டது.

எகிப்து 1967ல் மீண்டும் இஸ்ரேல் மீது படை எடுக்க தயாரானது. ஜோர்டானும் ஈராக்கும் எகிப்திற்கு உதவத் தயாராகின. ஆனால் அதற்குள் இஸ்ரேல் மின்னல் வேகத்தில் படை எடுத்துத் தாக்கியது. எகிப்து, சிரியா, ஜோர்டான் ஆகியவை கைப்பற்றிய பகுதிகளை இஸ்ரேல் ஆறு நாள் போரில் மீட்டுக் கொண்டது. எகிப்தியப் படையை சினாய் தீபகற்பத்திலிருந்து அது துரத்தியதோடு சிரியாவிடமிருந்து கோலன் ஹைட்ஸையும் ஜோர்டானிடமிருந்து ஜோர்டான் நதியை ஒட்டிய மேற்குப் பகுதியையும் கைப்பற்றியது.

இப்போது நடக்கும் வளைகுடாப் போரில் இஸ்ரேலுக்கு எதிரிகளாக உள்ள எந்த நாடும் ஈராக்கிற்கு உதவ முன் வரவில்லை. ஈராக் குவைட்டை ஆக்கிரமித்தது தவறு என்றே மத்திய தரைக்கடல் நாடுகள் கூறிவருகின்றன. ஆயினும் இஸ்ரேலைத்தான் தாக்கினால் தன்னை அது திருப்பித்தாக்கும் என்றும் அப்போது அதன் எதிரிகளான நாடுகள் தனக்கு உதவும் என நினைத்தே ஈராக் இஸ்ரேலைத் தாக்கியுள்ளது. இப்படியாகப் போரில் ஒரு புதிய திருப்பு முனை ஏற்பட்டுள்ளது.





# நன்றிக் கடன்

**வா**ங்கல் என்ற ஊரில் வைரமுத்து என்ற வட்டிக்கடை வியாபாரி இருந்தான். அவன் தன் வட்டிக் கடையைத் தன் ஊருக்குப் பக்கம் உள்ள பெரிய ஊரான கரூரில் வைத்து நடத்தி வைத்தான். தயைதாட்சணயம் பாராமல். அவன் வட்டியை வசூலித்து விடுவான். கரூரில் அவன் கடை நன்றாக நடந்ததது. தினமும் அவன் தன் ஊரிலிருந்து கரூர் போய் வியாபாரத்தை கவனித்து விட்டு இரவில் ஊர் திரும்புவான்.

ஒருநாள் அவன் பணவசூல் செய்து கொண்டு கரூரிலிருந்து தன் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அன்று வட்டியும் முதலுமாக வசூலான தொகை பத்தாயிரம் ரூபாய். அதனைப் பையில் போட்டுக் கட்டி பத்திரமாக மடியில் வைத்துக் கொண்டு நடந்து தன் ஊருக்கு திரும்பிக் கொண்டிருந்தான். அவன் மனது பக் பக்கென்று அடித்துக் கொண்டிருந்தது. ஏனெனில் அந்த பகுதியில்தான் கொள்ளைக்காரன் பக்கிரி இரவு வேளைகளில் திரிந்து வழிப்போக்கர்களிடமிருந்தவற்றைக் கொள்ளை அடித்துக் கொண்டிருந்தான்.

சாலையில் மரங்கள் அடர்ந்திருந்தன ஒரு பெரிய புளிய மரத்தை வைரமுத்து அடைந்த போது ஒரு குரல் "யார் அங்கே போவது?" என்று கேட்டுக் கொண்டு அவனருகே வரலாயிற்று. வைரமுத்து பக்கிரி தான் வந்து விட்டான் என்று பயந்தான். இனித் தன் பணமும் போவதோடு தன் உயிருக்கும் ஆபத்து வந்து விட்டதே என எண்ணி அவன் நடுநடுங்கினான்.

அப்போது குரல் கொடுத்தவன் அவனருகில் வந்து "ஓ! வட்டிக் கடை ஐயாவா! ஊருக்குத் தானே

-கமலா நடராஜன்-



போகிறீர்கள் நானும் கூட வரு கிறேன்'' என்று கூறித் தன் கடப் பாரையைத் தோளில் போட்டுக் கொண்டான்.

வைரமுத்துவுக்குப் போன உயிர் திரும்பியது. அவனும் சிரித்தக் கொண்டே "ஆமாம். செல்ல முத்து! இன்று ஒரு காசு கூட வசூலாகவில்லே. வெறுங்கையுடன் திரும்பிக் கொண்டிருக்கிறேன்'' எனப் புளுகினுன்.

இருவரும் வழியில் ஒரு கால் வாயைக் கடக்க நேர்ந்தது. வைர முத்து கால் வழுக்கி அதில் விழ இருக்கையில் அவனேடு வந்த செல்ல முத்து அவனே விழாமல் பிடித்துக் கரை சேர்த்தான். அப்போது அங் கிருந்த ஒரு மரத்தின் பின்னிருந்து "யார் போவது?'' என்று மிரட்டும் குரலில் கேட்டது.

அது பக்கிரியின் குரல் என்று கண்டு கொண்ட வைரமுத்து செல்ல முத்துவிடம் "உன்னிடம் ஒரு பொய் சொல்லி விட்டேன். இந்தப் பணப் பையில் பத்தாயிரம் ரூபாய் இருக் கிறது. நீ இதை பத்திரமாக வைத்து என்னேயும் காப்பாற்று'' எனக் கூறிப் பையை அவனிடம் கொடுத் தான். செல்லமுத்துவும் "பயப்படா தீர்கள். நான் பார்த்துக் கொள்கி றேன்'' என்று கூறிப் பையைத் தன் முண்டாசில் வைத்து மறைத்து விட்டான்.

பக்கிரி அவர்களே அணுகி "ஓ! செல்லமுத்துவும் வட்டிக் கடைக் காரருமா? சரி. ஏழை விவசாயி செல்லமுத்துவிடம் என்ன இருக்கப் போகிறது! அவனே விட்டு விடுகி றேன். வைரமுத்து! உன்னிடம் இருப் பதை மரியாதையாகக் கொடுத்து விடு'' என்று அவன் கையைப் பிடித் தான்.

வைரமுத்துவோ "என்னிடம் ஒன்றும் இல்லே'' எனவே பக்கிரி "பணக்காரனுன நீ பணம் இல்லா மலா வருவாய்?'' என்று அவனே அடிக்கக் கையை ஓங்கினுன். அப் போது வைரமுத்து "செல்லமுத்து! என்னேக் காப்பாற்று'' என்று அலறி னுன். செல்லமுத்துவும் "ஏய் பக் கிரி! அவ்வரை விட்டு விடு. அவர் தான் தன்னிடம் எதுவும் இல்லே என்கி

ளுரே. நீ மட்டும் அவரை அடித்தால் இந்த கடப்பாரையால் உன் தலையை அடித்து நொறுக்கி விடுவேன்'' என்று கூறித் தோளின் இருந்த கடப்பாரையை எடுத்தான்.

பக்கிரி பயந்து வைரமுத்துவை விட்டுவிட்டு ஓடி விட்டான். வைர முத்துவைச் செல்லமுத்து அழைத்துக் கொண்டு வாங்கலில் அவனது வீட்டில் கொண்டு போய் விட்டு அவன் கொடுத்த பணப்பையையும் கொடுத்து விட்டுத் தன் வீட்டிற்குச் சென்ருன்.

ஒரு மாத காலம் கழிந்தது. ஒரு நாள் பக்கிரி வைரமுத்துவின் வீட்டிற்கு வந்து அவனைக் கண்டு ''வட்டிக் கடைக்காரரே! எனக்கு இப்போதே ஆயிரம் ரூபாய் வேண்டும் கடனுகத்தான் கேட்கிறேன். அடுத்த மாதம் வட்டியோடு சேர்த்துத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்'' என்ருன்.

வைரமுத்து சற்று யோசித்து அவன் கேட்ட ஆயிரம் ரூபாயைக் கொண்டுவந்து கொடுத்தான். பக்கிரியும் அதனை வாங்கிக் கொண்டு சென்ருன்.

அதற்குச் சில நிமிடங்களுக்குப் பின் செல்லமுத்து. ஓடி வந்து ''ஐயா! ஒரு நூறு ரூபாய் கடனுக கொடுங்கள். என் மனைவி ஆபத்தான நிலையில் இருக்கிருள். பட்டணத்திற்கு அழைத்துப்போய் வைத்தியம் செய்யவேண்டும்'' என்று கெஞ்சினுன். வைரமுத்துவோ ''என் வீட்டில் பணமா காய்க்கிறது? இப்போதுதான் பக்கிரி வந்து ஆயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு போனுன்.





ஒரு நாள் வைரமுத்துவின் வீட்டில் பணமும் நகைகளும் களவு போயின. நூறு பவுன்கள் மதிக்கத்தக்க நகைகளும் இருபத்தையாயிரம் ரூபாய் ரொக்கமும் போயிற்று. வைரமுத்து "ஐயோ! அவ்வளவும் போயிற்றே" என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுதான். ஊராரும் மேலுக்கு அவனுக்காக இரக்கப்படுவது போல அவன் எதிரில் பேசிவிட்டுப் போனாலும் மறைவாக "வேண்டும் இந்தப் பயலுக்கு! அநியாய வட்டி கறந்தான். அது வந்த விதத்திலேயே போய்விட்டது" என்று சிரித்துக் கொண்டே தமக்குள் பேசிக் கொண்டார்கள்.

இந்தத் திருட்டு நடந்த இரண்டாவது நாள் செல்லமுத்து ஒரு வயலில் வேலை செய்து கொண்டிருந்தான். அப்போது கொள்ளைக்காரப் பக்கிரி அங்கே வந்து "நீதானே செல்லமுத்து?" என்று சிரித்தவாறே கேட்டான். செல்லமுத்துவும் நிமிர்ந்து பார்த்துவிட்டு "ஆமாம் என்னைத் தேடிக்கொண்டு நீ ஏன் இங்கே வந்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

பக்கிரியும் "நான் அன்று வட்டிக் கடை வைரமுத்துவிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு போனபோது நீ அங்கே வந்ததைப் பார்த்தேன் நீயும் அவனும் பேசியதையும் கேட்டேன். அவன் உனக்கு நூறு ரூபாய் கடன் கொடுக்க

அவனாவது எங்கேயாவது கொள்ளை அடித்தாவது என் கடனைத் தீர்த்து விடுவான். நீயோ அன்னுடம் கூலிக்கு வேலை செய்பவன். உனக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தால் எப்படித் திருப்பிக் கொடுக்க முடியும்? என்னிடம் பத்து ரூபாய்தான் இருக்கிறது. நீ அன்று என்னையும் என் பணத்தையும் பக்கிரியிடமிருந்து காப்பாற்றினாய். அதற்காக இந்தப் பத்து ரூபாயை இனாமாகக் கொடுக்கிறேன்" என்று கூறிப் பத்து ரூபாயை எடுத்து நீட்டினான்.

செல்லமுத்து அந்தப் பத்து ரூபாயை வாங்கிக் கொள்ளாமல் எதுவும் பேசாமல் அங்கிருந்து சென்றுவிட்டான்.

இரண்டு வாரங்கள் கழிந்தன.

மறுத்துவிட்டான். நான் உனக்கு இருநூறு ரூபாய் கொடுக்கிறேன். இந்தப் பணம் ஒரு காலத்தில் வைர முத்துவினுடையதாக இருந்தது. இதனை உனக்கு நான் தானம் செய்வதால் அந்தப் புண்ணியம்கூட அந்த வைரமுத்துவையே போய்ச்சேரும்'' என்று கூறி ஒரு பணப்பையை செல்லப்பனின் முன்வைத்துவிட்டு அவனது பதிலுக்குக் கூடக் காத்திராமல் வேகமாக அங்கிருந்து ஓடிவிட்டான்.

செல்லமுத்து அந்தப் பையை எடுத்துக் கொண்டு வைரமுத்துவின் வீட்டை அடைந்தான். அவனிடம் வயலில் நடந்ததைக் கூறி ''ஐயா! பக்கிரி இந்தப் பையில் இருநூறு ரூபாய் இருப்பதாகக் கூறி என் முன் வைத்துவிட்டுப் போனான். நான் பையைத் திறக்கக்கூட இல்லை. நீங்களே எண்ணி சரியாக இருக்கிறதா என்று பாருங்கள்'' என்றான்.

ஆனால் வைரமுத்து அந்தப் பையை செல்லமுத்துவிடமிருந்து வாங்கிக் கொள்ளாமல் ''செல்லமுத்து! என்னை மன்னித்துவிடு. அன்று நான் திமிராக பக்கிரி கொள்ளையடித்தாவது என் கடனைத் தீர்ப்பான், நீ எப்படித் தீர்க்க முடியும் என்று கேட்டேன். அவன் வேறு யார் வீட்டிலும் கொள்ளையடிக்கவில்லை. என் வீட்டிலேயே கொள்ளை அடித்து என் கடனைத் தீர்த்தான்! நீ அன்று என் பணத்தையும் என்னையும் அவனிடமிருந்து காப்பாற்றினாய். அதற்கு நன்றி செலுத்தத் தவறியதோடு தக்க சமயத்தில் உனக்கு உதவவும் மறுத்தேன். அதற்கான தண்டனை எனக்கு கிடைத்து விட்டது. இந்தப் பணத்தை நீயே வைத்துக் கொள். இது நான் உனக்கு செலுத்தும் நன்றிக் கடன்'' எனக் கூறித் தன் கண்ணில் ததும்பிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

செல்லமுத்து அவனை வணங்கிவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்றான்.



# துறவறம் எது?

வெகு காலத்திற்கு முன் சுவேதாரண்ணியத்தில் இரு முனிவர்கள் ஆசிரமங்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தனர். ஒருவர் கங்காதரர். மற்றவர் லீலாதரர்.

ஒருநாள் லீலாதரர் கங்காதரரிடம் "நான் இந்த ஆசிரமத்தை விட்டு நகரத்திற்கு போய் கொஞ்ச நாட்கள் அங்கிருக்க நினைக்கிறேன். இந்த ஆசை நீண்ட நாட்களாக என் மனதில் உள்ளது. அதனை அடக்க முடியவில்லை" என்றார். கங்காதரர் புன்னகை புரிந்தவாறே "சரி, போய் வாருங்கள். உங்கள் ஆசிரமத்தை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார்.

லீலாதரர் நகருக்குச் சென்றார். அங்குள்ள வாழ்க்கை முதலில் இனிமையாக இருந்தாலும் போகப் போக அவர் அதை வெறுக்கலானார். மக்களிடயே போட்டி, பொறாமை, சூது, வாது, மோசடி, சதி போன்ற இயல்புகளைக் கண்டு அவர் மனம் நொந்து, விரைவிலேயே தம் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தார்.

அவர் கங்காதரரிடம் தாம் நகரில் கண்டவற்றை எல்லாம் கூறவே கங்காதரர் பதில் எதுவும் கூறாமல் புன்னகை புரிந்தார். அப்போது லீலாதரர் "மனிதர்களின் இயல்புகள் எல்லாம் மிகவும் மோசமானது என்று தங்களுக்கு புரியவில்லையா?" என்று கேட்டார்.

அப்போது கங்காதரர் "நீங்கள் துறவறம் மேற்கொண்டதே இத்தகைய தீய குணங்களை விட்டொழித்து விட்டு கடவுளை தியானம் செய்யத்தானே. ஆனால் நீங்கள் இங்கு வந்தபோது அவற்றை முற்றிலும் விட்டொழிக்காமல் இருந்ததாகத் தெரிகிறது. அதனால்தான் நகர வாழ்க்கையை விரும்பிச் சென்றீர்கள். மீண்டும் அவற்றைக் கண்டு வெறுப்புற்று வந்திருக்கிறீர்கள். இனியாவது உலக ஆசாபாசங்களை விட்டு விட்டு கடவுளை தியானிப்பதிலேயே மனதைச் செலுத்துங்கள்" என்றார்.

லீலாதரர் உண்மைத் துறவறம் எது என அறிந்து அப்போது முதல் கடவுள் தியானத்தில் முழு மனதைச் செலுத்தினார்.






**ச**தானந்த முனிவர் இமயமலை உச்சிமீது நின்று சுற்றிலும் பார்த்தார். பனியால் மூடப்பட்ட பள்ளத்தாக்கு கதிரவனின் ஒளிபட்டு தங்கம் போல மின்னியது. பள்ளத்தாக்கில் பல சிறிய நதிகளும் பரந்த வெளிகளும் தென்பட்டன.

முனிவர் கிழக்கு நோக்கு ஒரு முறை பார்த்து விட்டு மீண்டும் பள்ளத்தாக்கைப் பார்க்கலானார். அப்போது அவர் மனதில் பலதரப்பட்ட எண்ணங்கள் எழுந்தன. கடவுள் தாம் எவ்வளவு அழகான இயற்கை அன்னையை உருவாக்கி இருக்கிறார்! இப்பூஉலகையும் அதில் பலவிதப் பறவைகளையும், பலவித உயிரினங்களையும் படைத்துவிட்டு முடிவில் மனிதனையும் தோன்றச் செய்தார். அவர் மனிதனுக்கு நல்லது எது, கெட்டது எது எனத் தன் அறிவால் அறிந்து கொள்ளும் சக்தியையும் அளித்திருக்கிறார். ஆனால் மனிதன் தன் அறிவைப் பயன்படுத்தி அமைதியுடன் சுகமாக வாழ்கிறானா? இல்லையே. போட்டியும் பொறாமையும் கொண்டு பிறரை ஏமாற்றி அவரிடமுள்ளதைப் பறித்துக் கொள்ளவே முயல்கிறானே! இது என்ன கொடுமை! இதனைப் போக்கி எல்லோரும் சுகமாக வாழ ஏதாவது ஒரு வழி செய்தாக வேண்டும்.

அதற்கு அவர்ஒரு வழி கண்டு பிடித்தும் விட்டார். அவர் தம்



சக்திகளை எல்லாம் ஒன்றுதிரட்டி அதற்கு ஒரு உருவம் கொடுத்து அதன் வாயிலாக உலகிற்கு நன்மைகளைச் செய்து உபதேசிக்கவும் முடிவு செய்தார்.

அப்போது அவருடைய சீடனான சோமன் அவரை அணுகி "குருவே! தாங்கள் குறித்துள்ள நல்ல முகூர்த்த வேளை நெருங்கி விட்டது" எனவே அவரும் "ஆமாம் சோமா! யாகத்தை ஆரம்பிக்கலாம்" என்று கூறினார்.

இருவரும் குகைக்குள் சென்றார்கள் அக்குகைக்கு இருபுறங்களில் வழிகள் இருந்தன. குகையின் நடுவே யாகத்தீ மூட்டப்பட்டது. முனிவர் அந்த ஹோமகுண்டத்தின் முன் அமர்ந்தார். அவர் தம் சீடனிடம் "சோமா! நீ இந்த அக்கினியைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிரு. இதன் தீப்பிழம்புகள் நன்கு உயர்ந்து எழும்பும். அப்போதுதான் நம் முயற்சி கைகூடும்" என்றார்.

அவர் கண்களை மூடிக்கொண்டு சற்று நேரம் தியானத்தில் ஆழ்ந்தார். பிறகு கண் விழித்துப் பல மந்திரங்களை ஓதினார். பிறகு அவர் ஓமகுண்டத்தில் நெய்யையும் சமித்துகளையும் மந்திரங்களை ஜெபித்தவாறே போட்டார்.

ஓம குண்டத்தில் தீ நன்கு எரிந்தது அதன் நடுவே ஒரு உருவம் உருவாகிக் கொண்டு வருவதைக் கண்டு முனிவர் மகிழ்ந்தார். ஒரு சில நொடிகளில் அது ஒரு சிறு மனித வடிவம் பெற்றது. பிறகு அது ஓமத்தீயிலிருந்து வெளியே வந்தது. அதற்கு மனிதனுக்கு இருக்க வேண்டிய அவயவங்கள் எல்லாம் சரியாகவே அமைந்திருந்தன. அது பார்க்க் அழகிய பொம்மை போல இருந்தது. ஏனெனில் அது மனிதனின் முழு உயரத்தில் இருக்கவில்லை. மிகவும் குட்டையாகத் தான் இருந்தது.

அந்தக் குள்ளமனிதன் முனிவரைப் பார்த்து "சுவாமி! என் பெயர் என்ன?" என்று கேட்டான். முனிவரும் "நீ ஒரு மனிதன். ஆனால் சாதாரண மனிதனைப்போல நீ இருக்கமாட்டாய். யாக குண்டத்தில் பஞ்ச பூதங்களின் சக்தி கொண்டு நான் விசேஷ முறையில் உன்னை உரு



வாக்கி இருக்கிறேன். உனக்கு எல்லா சக்திகளும் கிடைத்துள்ளன. நல்லது, கெட்டது இரக்கம், கொடூரம், உண்மை, பொய் இவற்றை எல்லாம் பாகுபடுத்தி அறியும் சக்தி உனக்கு உண்டு. ஆனால் நீ கொடூரம், பொய், கெட்டது முதலியவற்றை விரும்பமாட்டாய். சாதாரண மனிதர்கள் தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளப் பல விதத்திலும் பாடுபடுவார்கள். ஆனால் நீ தர்மத்தை நிலைநாட்டுவது என்றே இருப்பாய். உன்னால் நான் நினைக்கும் உலகம் உருவானால் புதிய உலகத்திற்கு வழிகாட்டியாக நீ விளங்குவாய் என்றே நினைக்கிறேன்'' என்றார்.

அந்தக் குள்ள மனிதனே "ஆனால் நான் எல்லோரையும் விடக் குள்ளமாக இருக்கிறேனே. ஏன் இப்படி ஏற்பட்டது?'' என்று கேட்டான். இனிவரும் "நீ மற்றவர்களிலிருந்து மாறுபட்டவன் என்று கூறினேன் அல்லவா? மற்றவரை விட உன் மனம் மிக உயர்ந்தது. எல்லோரையும்விட அறிவில் சிறந்தவனும் சக்தி உள்ளவனும் நீ விளங்குகிறாய். ஒரு மனிதனிடம் உயர்ந்த அம்சங்கள் இருக்கையில் ஏதாவது ஒரு குறை இருக்கத்தான் செய்யும். இது இயற்கையின் நியதி. உன் உடல் சிறிது என்றாலும் அதற்கு சக்தி மிக அதிகம். அதனால்தான் நீ மானிட வர்க்கத்தை உயர்த்தி அதன் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டும்'' என்றார்.

"அப்படியே செய்கிறேன்'' என்றான் அந்தக் குள்ள மனிதன். முனிவரும் "உன் இந்தச் சிறிய உடல் நீ வேகமாகச் செல்வதற்கு ஏற்றதாக இருக்கும். ஆனால் நீ எப்போதும் இப்படிக் குள்ளமாகவே இருக்கப் போவதில்லை. உன் வாழ்க்கையில் பல நாட்கள் போராட்ட மயமாகவே இருக்கும். பிறகு உனக்கு அமைதியான வாழ்வு கிடைக்கும். அப்போது நீ சாதாரண மனிதனின் உருவை அடைவாய். அது எப்போது எப்படி நடக்கும் என்பதைக் காலம் தான் தீர்மானிக்கும்'' என்று கூறினர்.

பிறகு அவர் சற்று நேரம் கண்களை மூடிக்கொண்டு மௌனமாக

இருந்தார். அவர் கண்களைத் திறந்து புன்னகை புரிந்தவாறே "மகனே! உன் போன்றவன் இதற்கு முன் பிறந்தது இல்லை. எனவே உனக்கு விஞேதன் என்ற பெயரைச் சூட்டு கிறேன்" என்ருர்.

அதன் பிறகு முனிவரின் கட்டளைப் படி சோமன் பல பழங்களைக் கொண்டு வந்து விஞேதனுக்குக் கொடுத்தான். அவனும் அவற்றில் பலவற்றை எடுத்துச் சாப்பிட்டான். முனிவரும் "மகனே! இந்தப் பழங் களைச் சாப்பிட்டவர்களுக்குப் பல நாட்கள் வரை பசியும் தாகமும் எடுக்காது" என்ருர். விஞேதனும் "மிக்க நன்றி சுவாமிகளே! நான் இப்போது இங்கிருந்து வெளியே போகலாமா?" என்று பணிவுடன் கேட்டான்.

முனிவரும் "ஆகா! நீ சாதாரண மாக இந்த குகையிலிருந்து பரந்த வெளிக்குச் செல்லலாம்" என்ருர். விஞேதனும் முனிவரைப் பணிவு டன் வணங்கிவிட்டுக் குகையி லிருந்து வெளியே சென்ருன். அவன் பின்னலேயே முனிவரும் சோமனும்கூட குகையிலிருந்து வெளியே வந்தார்கள்.

இளஞ்சூரியனின் கிரணங்கள் பட்டதும் விஞேதன் "ஆகா! என்ன சுகம்" எவ்வளவு மன நிறைவு! என மகிழ்ச்சியுடன் கூறி ஞன். முனிவரும் "மகனே! இப் படிப்பட்ட சுகம் உனக்கு என்றென் றும் கிடைக்க வேண்டும் என்று வாழ்த்துகிறேன். உண்மையில் உலகம் சுகமான இடமே. ஆனல் மனிதன் தன் செயல்களால் அதனைப்





அவனால் பார்க்கவும் அங்கு ஏற்படும் ஓசை ஒலிகளை அவனால் கேட்கவும் முடியும். இது மட்டுமல்ல, அவன் காற்றைப்போல வெகு வேகமாகவும் செல்லக்கூடியவன்'' என்றார்.

அப்போது விநோதன் "சுவாமி! அங்கே என்ன விஷயம் என்று அறிய என்னைப்போக அனுமதிக்கிறீர்களா?'' என்று கேட்டான். முனிவரும் "போய்வா மகனே! போய்வா! கடவுள் உனக்கு உறுதுணையாக இருப்பார்'' என்று கூறி வாழ்த்தினார்.

அடுத்த நொடியிலே விநோதன் வெகு வேகமாக ஓடினான். சற்று நேரத்தில் அவன் கண்ணாடி பொம்மைப்போலாகி காற்று வேகத்தில் சென்று மறைந்து விட்டான்.

பாழ்படுத்திவிடுகிறான். நீ அவர்களது அந்தத் தீய செயல்களைத் தடுத்து நிறுத்தி அவர்களை நல்வழிப்படுத்த வேண்டும்'' என்றார்.

அப்போது விநோதன் ஏதோ கேட்பது போல "இதென்ன! எங்கிருந்தோ புலம்புவது போன்ற ஒலி கேட்கிறதே. அதோ தீப்பற்றி எரிவது தெரிகிறதே'' என உணர்ச்சிவசப்பட்டுக் கூறினான். சோமனோ "நாங்கள் அப்படி எதையும் கேட்கவில்லையே. தீப்பற்றி எரிவதையும் பார்க்கவில்லையே'' என்றான்.

அப்போது முனிவர் "விநோதன் நம்மைவிடக் கூர்ந்து பார்க்கவும் கேட்கவும் சக்தி கொண்டவன். தொலை தூரத்தில் உள்ளவற்றை

முனிவரும் "அவனது வேகம் ஒரு குறிப்பிட்ட நிலையை அடைந்ததும் அவன் யார் கண்ணுக்கும் புலப்படாமல் காற்றோடும் ஒலியோடும் சேர்ந்து பயணம் செய்வான்'' என்றார்.

ஓரிடத்தில் சில முரடர்கள் "ஓஹோ! ஜமீன்தாரரின் மாளிகையைக் கட்டுவதற்கு வேலை செய்ய நீங்களெல்லாம் வரவா மறுக்கிறீர்கள்? அப்படியானால் நீங்கள் எல்லாம் இங்கே வாழ முடியாது'' எனக்கூறி அங்குள்ள குடிசைகளுக்குத் தீ வைத்தார்கள்.

அந்தக் குடிசைவாசிகளோ

"நாங்கள் எவ்வளவு நாட்கள் தான் கூலி இல்லாமல் இந்த வேலையைச் செய்ய முடியும்?" என்று கண்ணீர் விட்டுக் கதறினார்கள். அவர்களால் அந்த முரடர்களின் அடாத செயலைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

அந்த முரடர்கள் அந்த ஏழை மக்கள் கூறியதை பற்றிச் சற்றும் கவலைப்படவில்லை. அட்டகாசமாகச் சிரித்தவாறே அந்தக் குடிசைகள் தீப்பற்றி எரிவதைக் கண்டு சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது திடீரென மழை பெய்து அந்தக் குடிசைகளின் தீயை அணைத்தது. அது கண்டு அந்த முரடர்கள் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து ஆச்சரியப்பட்டு நின்றார்கள் எங்கும் மேகம் தென்படவில்லை. ஆனால் மழை மட்டும் எப்படிப் பெய்கிறது? அப்போது திடீரென ஒரு ஒலி ஒலித்தது. அதுகேட்டு அந்த முரடர்கள் அந்த ஒலி வந்த திக்கில் பார்த்தார்கள்.

அதற்குள் அப்பகுதியில் மழையால் நீர் நிறைந்து விட்டது. அதில் நடந்தவாறே ஒரு யானைக் கூட்டம் வந்தது. அந்த யானைகள் தாம் ஆற்று நீரைத் தம் துதிக்கைகளில் நிரப்பி வாரி இறைத்து குடிசைகளின் தீயை அணைத்தவை. தீயும் அணைந்துவிட்டது. யானைகளோ பயங்கரமாகப் பிளறியவாறே அந்த முரடர்களைத் தாக்கின. அவர்கள் பயந்து ஓட அவை அவர்களைத் துரத்தின.

அந்தக் காட்சியைக் கண்டவாறே ஒருவன் பலமாகச் சிரித்தவாறே அங்கு வந்தான். ஆம்! அவன் ஒரு பெரிய யானைமீது பொம்மை போலத் தென்பட்டான். யானை மீது நின்று சிரித்த அவனைக் கண்டு முரடர்கள் "இவன் யார்? பூதமா அல்லது தேவனா?" என்று மலைத்துப் போனார்கள்.

(தொடரும்)



# எங்கு தவறு தெரிந்ததா?

வெகு காலத்திற்கு முன் கோசல நாட்டில் கோமேதகன் என்ற கவிஞர் இருந்தார். அவர் பரம ஏழை. அவரது கவிதைகளைப் படித்த வித்தியானந்தர் என்ற பண்டிதர் "நீங்கள் உங்கள் கவிதைகளை இந்நாட்டு மன்னருக்குப் படித்துக் காட்டினால் அவர் உங்களுக்கு நிறையப் பரிசுகளை அளிப்பார். அவர் இலக்கிய ரசிகர்" என்றார்.

கோமேதகக் கவிதையும் தலைநகர் சென்று மன்னரைக் கண்டு தம் கவிதைகளைப் படித்துக் காட்டினார். மன்னனும் அவற்றைப் பாராட்டிப் பரிசளித்ததோடு அந்தக் கவிஞரைத் தன் ஆஸ்தானக் கவிஞர்களில் ஒருவராகவும் நியமித்து விட்டான்.

சில மாதங்களுக்குப்பின் கோமேதகன் வித்தியானந்தரைச் சந்தித்த போது 'இப்போ தெல்லாம் நான் எழுதும் கவிதைகள் முன்பு நான் எழுதியவை போல உயர்ந்ததாக இல்லை என்று பலர் கூறுகிறார்களே . இதற்கு என்ன காரணம் இருக்கும்?" என்று கேட்டார்.

வித்தியானந்தரும் "முன்பு நீங்கள் கவிதைகள் எழுதினீர்கள். அவற்றைப் பாராட்டி மன்னர் உங்களுக்குப் பரிசு அளித்தார். இப்போதோ நீங்கள் மன்னரின் பாராட்டைப் பெறக் கவிதைகள் எழுதுகிறீர்கள். அதுதான் காரணம்" என்றார்.

கோமேதகருக்குத் தன் தவறு புரிந்தது. அப்போது முதல் மன்னரின் பாராட்டிற் காக அல்லாமல் கவிதைகளை எழுதிப் புகழ் பெற்றார்.






# சிங்கமும் சிறுவனும்

தன்முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர இரவில் இப்படிச் சிரமப்படுகிறாயே. இந்த முயற்சியின் பயனாக ஏற்படும் முடிவு கண்டு நீ சோர்வு அடைந்தும் போகலாம். இதை விளக்க உனக்குத் தெரிந்த ஒரு பழைய கதையை நான் புதிய திருப்பத்தோடு கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

விந்திய மலைச் சாரலில் வித்தியா நாதர் என்ற முனிவர் ஒரு குருகுலத்தை நடத்தி வந்தார். அந்த குருகுலம் ஒரு ஆற்றின் கரை மீது

## வேதாளம் சொல்லும் கதை



அவர் அவர்களுக்கு விளக்கமாக எல்லாவற்றையும் கூறி போதித்துப் பார்த்தார். ஆனால் அவர்களது மர மண்டையில் அதெல்லாம் ஏறினால் தானே!

அதே குருகுலத்தில் ஞானமணி என்ற சீடன் இருந்தான். அவன் மகா புத்திசாலி. எதையும் ஒருமுறை சொன்னால் போதும் கிரகித்துக் கொண்டுவிடுவான். அவன் மீது குருவுக்கு அலாதி பிரியம். தனக்குப் பின் அந்த ஆசிரமத்தை அவனிடம் ஒப்படைத்து விட எண்ணினார். அதற்காக ஞானமணி இன்னும் சற்றுப் பக்குவம் அடைய வேண்டும் எனவும் எண்ணினார். ஏனெனில் ஞானமணி பேருக்கும் அதிகாரத்திற்கும் ஆசைப்படுவது அவருக்குத் தெரிந்தது.

மூன்று அரச குமாரர்கள் படிப்பில் அதிக கவனம் செலுத்தாமல் மந்திர தந்திரங்களைக் கற்பதில் நாட்டம் கொண்டார்கள். அவர்கள் குருகுலத்திலுள்ள பல ஓலைச் சுவடிகளை எடுத்துப் படித்துச் சில மந்திரங்களையும் கற்றுக் கொண்டார்கள். அவர்களது படிப்பு முடிய ஒரு மாதம் இருக்கும் போது அவர்களது தந்தை மிகவும் அபாயகரமான நிலையில் இருப்பதாகத் தகவல் கிடைத்தது.

அரச குமாரர்கள் உடனேயே தலைநகருக்குப் போக விரும்பினர்கள். குருவோ "உங்கள் படிப்பும்

அமைந்திருந்தது. ஆசிரமத்தின் ஒரு புறம் மலைத் தொடரும் மறுபக்கம் அடர்ந்த காடும் இருந்தன. அந்த ஆசிரமத்தில் சீடர்கள் தங்கிக் கல்வி கற்க வசதிகள் செய்யப்பட்டும் இருந்தன. வித்தியாநாதரின் புகழ் பரவி இருந்ததால் பல நாடுகளிலிருந்தும் மாணவர்கள் அங்கு வந்து அவரிடம் கல்வி பயின்று வந்தார்கள்.

அந்நாட்டு மன்னன் தன் மூன்று புதல்வர்களையும் அந்தக் குருகுலத்தில் கல்வி பயில அனுப்பினன். அந்த அரச குமாரர்கள் மந்த அறிவு கொண்டவர்கள். ஆயினும் வித்தியாநாதர் அவர்களைத்தான் குருகுலத்தில் சேர்த்துக் கொண்டார். அரச குமாரர்கள் ஆயிற்றே என எண்ணி

முடிந்து விட்டது. அரண்மனையிலிருந்து அழைத்துப் போக யாராவது வருவார்கள். இன்றைக்குள் யாரும் வராவிட்டால் நம் ஞானமணியை உங்களுக்குத் துணையாக அனுப்புகிறேன். அவன் உங்களை பத்திரமாக அரண்மனைக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பான். வேண்டுமானல் அவனை உங்களோடு வைத்துக் கொள்ளுங்கள். சமயத்திற்கு - ஏற்ப தக்க ஆலோசனைகளையும் கூறி வருவான்'' என்றான்.

அரச குமாரர்களில் மூத்தவனும் ''ஞானமணியா? ரொம்ப நல்லதாய் போயிற்று. அவன் இங்கும் எங்களோடு நன்றாகப் பழகினன். நான் அவனை என்னுடன் வைத்துக் கொள்கிறேன். நான் அரசனானதும் அவனை முதலமைச்சராகவும் நியமித்துக் கொள்கிறேன்'' என்றான்.

வித்தியாநாதரும் ஞானமணியை அழைத்து ''நீ அரச குமாரர்களோடு போய் அவர்களுக்கு எவ்வித ஆபத்தும் வராமல் பார்த்துக் கொள். உனக்கும் அரண்மனை வாசம் பிடிக்கும் என்றே நினைக்கிறேன்'' என்றார்.

ஞானமணியோ ''குருவே! நான் இதே ஆசிரமத்தில் தங்கி என் வாழ் நாள் முழுவதையும் கழிக்க விரும்புகிறேன்'' என்றான். வித்தியாநாதரும் ''நீ ஆசிரமத்திலேயே நிரந்தரமாக தங்கி விடும் அளவிற்கு உன் மனம் இன்னமும் பக்குவப்படவில்லை. எனவே நீ இப்போது




அரச குமாரர்களுடன் போய் நான் சொன்னபடி செய். உன் மனம் பக்குவப்பட்டதும் உடனே நீ இந்த ஆசிரமத்திற்குத் திரும்பி வந்து விடலாம். நீ அரண்மனையில் தங்கத் தேவை இல்லை'' என்று கூறினர்.

ஞானமணியும் குருவின் கட்டளைப் படி மறுநாள் காலை அரச குமாரர்களுக்குத் துணையாகக் கிளம்பி விட்டான். எதிர்பார்த்தபடி அரண்மனையிலிருந்து யாரும் வரவில்லை. நால்வரும் பயணம் செய்தவாறே உச்சி வேளைக்கு ஒரு சிற்றாற்றின் கரையில் தங்கி தாம் கொண்டு வந்த உணவை உண்டனர்.

உண்ட பின் அவர்கள் அங்கேயே தங்கிச் சற்று இளைப்பாறத் தீர்மானித்தனர். எனவே அவர்கள்



குளிர் நிழல் தரும் இடத்தைத் தேடிச் சென்ருர்கள். சற்று தூரத்தில் அவ்வித மரம் கிடைக்கவே நால்வரும் அங்கு சென்று இளைப்பாறலானுர்கள்.

அப்போது கடைக்குட்டி அரச குமாரன் சற்று தூரத்தில் சில எலும்புகள் கிடப்பதைப் பார்த்தான். உடனே அவன் "இவை ஏதோ ஒரு சிங்கத்தின் எலும்புகள் என்று தெரிகிறது. என் மந்திர சக்தியால் இவற்றை ஒன்று சேர்த்து சிங்கத்தின் எலும்புக் கூட்டை உருவாக்குகிறேன்" என்ருன்.

அப்போது இரண்டாவது அரச குமாரன் "நீ சிங்க உடல் எலும்புக் கூட்டை உருவாக்கினுல் நான் என் மந்திர சக்தியால் அதற்கு நரம்புகளும் தசைகளும் வரச் செய்கிறேன்" என்ருன்.

மூத்த அரச குமாரனே "நீங்கள் இருவரும் அவ்வாறு செய்து விட்டால் நான் என் மந்திர சக்தியால் அதற்கு உயிர் வரும்படிச் செய்கிறேன். நாம் அனைவரும் அதன் மீது அமர்ந்து கம்பீரமாகத் தலை நகருக்குள் போய் எல்லோரையும் திகைக்க வைக்கலாம்" என்ருன்.

அவர்கள் கூறியதைக் கேட்ட ஞானமணி "இதென்ன விபரீத விளையாட்டு? சிங்கத்திற்கு உயிர் வந்து விட்டால் அது நம்மைச் சும்மா விட்டு விடுமா? எல்லோரையும் கொன்று விடுமே. அதனுல் இம்மாதிரிச் செய்ய வேண்டாம். நாம் பேசாமல் நம் வழியே செல்வோம்" என்ருன்.

மூத்த அரச குமாரனே "முடியாது. நான் சிங்கத்திற்கு உயிர் கொடுத்தால் அது நம்மை ஒன்றும் செய்யாது. நமக்கு நன்றி செலுத்துவதோடு நாம் சொல்கிறபடி எல்லாம் அது செய்யும். நமக்கு அடங்கி விடும். ஞானமணி! உனக்கு பயமாய் இருந்தால் இந்த மரத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு வேடிக்கை பார்" என்ருன். ஞானமணியும் அவர்களுக்கு எவ்வளவு சொன்னுலும் புத்தியில் ஏருது என நினைத்து அருகிலிருந்த ஒரு மரத்தின் மீது ஏறி ஒரு வலுவான கிளை மீது அமர்ந்து கொண்டான்.

முதலில் கடைசி அரச குமாரன் தனக்குத் தெரிந்த மந்திரத்தை உச்சரித்து சிங்க உடல் எலும்புக் கூட்டை உருவாக்கினன். இரண்டாவது அரச குமாரன் தனக்குத் தெரிந்த மந்திரத்தால் அதற்கு நரம்புகளும், தசைகளும் வரும்படிச் செய்தான். மூத்த அரச குமாரன் தன் மந்திர சக்தியால் அதற்கு உயிர் வரும்படிச் செய்தான். அவ்வளவுதான்! சிங்கம் உயிர் பெற்றதும் பயங்கரமாகக் கர்ஜித்துக் கொண்டு அந்த மூவர் மீதும் பாயத் தயாரானது.

அப்போது ஞானமணி கிளை மீதிருந்தவாறே சிங்கம் பேசும் மொழியில் "சிங்கமே! கொஞ்சம் நில். நான் சொல்வதைச் சற்று கேள்" என்று உரக்கக் கூவினன்.

சிங்கமும் குரல் வந்த திசையைப் பார்த்தது. அப்போது ஞானமணி "சிங்கமே! எனக்கு மிருகங்கள் பேசும் மொழிகள் தெரியும். உனக்கு உருக் கொடுத்து உயிர் கொடுத்தவர்களையா நீ கொல்லப் போகிருய்? இது நியாயமா?" என்று கேட்டான்.

அதைக் கேட்ட சிங்கம் தன் சீற்றத்தை மட்டுப்படுத்திக் கொண்டு "என்னை மன்னித்து விடு. இவர்கள் தாம் எனக்கு உருக் கொடுத்து உயிர் கொடுத்தவர்கள் என்பது எனக்குத் தெரியாது. எனக்கு அவர்கள் உயிரைக் கொடுத்ததும் அல்லாமல் என் நீண்ட காலப் பசியை



யும் கிளப்பி விட்டிருக்கிருர்கள். அந்தப் பசி ஒரு சில ஆண்டுகளது அல்ல, பல நூற்றுண்டுகளுக்கு முன் ஏற்பட்ட பசி" என்றது.

ஞானமணியும் சிங்கமும் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து மூன்று அரச குமாரர்களும் அங்கிருந்து ஓடிப் போய் விட்டார்கள். ஆனல் சிங்கமும் ஞானமணியும் நல்வினை, தீவினை, நியாயம், அநியாயம் பற்றி நீண்ட வாக்குவாதத்தில் இறங்கி விட்டார்கள்.

முடிவில் சிங்கம் "ஒருபுறம் பார்த்தால் என்னை உயிர்ப்பித்த அரச குமாரர்களை நான் கொன்று தின்பது சரி இல்லைதான். உயிர் விலை மதிப்பற்றது. நான் என் பசியைப்



போக்கிக் கொள்ளாவிட்டால் என் உயிரே போய் விடும். இப்போது நான் அலைந்து திரிந்து வேறு மிருகங்களை வேட்டையாடும் நிலையிலும் இல்லை. அதனுல் என் கண்ணெதிரே கண்ட உயிரினத்தைக் கொல்ல வேண்டும். எனவே அரச குமாரர்களே என் உணவு'' என்றது.

அப்போது ஞானமணி "உன் கண் எதிரே நான் இருக்கிறேன். என்னைக் கொன்று சாப்பிடு. ஆனுல் அரச குமாரர்களை ஒன்றும் செய்யாதே. ஏனெனில் அவர்களைக் காக்கும் பொறுப்பை ஏற்று நான் வந்திருக்கிறேன். அதனுல் என் உடலைக் கொடுத்து உன்னைக் காப்பாற்றுகிறேன்'' என்ருன்.

அப்போது சிங்கம் "சரி! உயிரினங்கள் உயிரோடு இருப்பதால் என்ன பயன்?'' என்று கேட்டது. அதற்கு ஞானமணி "உயிரினங்கள் முன்னேற்றம் அடைய வேண்டும். அதாவது இருளாகிய அஞ்ஞானத்தை விட்டு விட்டு ஒளியாகிய மெய் ஞானத்தை அடைய வேண்டும். இது தான் உயிர் வாழ்வதன் பயன்'' என்ருன்.

சிங்கம் "ஓ! அப்படியானுல் எது வேண்டும், எது வேண்டாம் என்பதை நீ நன்கு உணர்ந்தவன். அரச குமாரர்கள் தாம் எனக்கு உருக் கொடுத்து உயிர் அளித்தவர்கள் என்பதை மட்டும் நீ கூருது இருந்திருந்தால் நான் அவர்களை அப்போதே கொன்றிருப்பேன். நீ தர்ம நியாயங்களை எடுத்துக் கூறி என் கண்களைத் திறந்து விட்டாய். அதனுல் நீ என் குரு. எனவே உன்னை நான் கொல்வது அதர்மம். எனவே நான் இந்தக் கணத்திலேயே வேட்டையாடி உணவு பெற ஒரு வழியைச் சொல்'' என்றது.

அப்போது ஞானமணி "இதோ பார். அரச குமாரர்களை நான் உனக்கு உணவாகக் கொடுக்க முடியாது. விரைவில் உன் பசி அடங்க வேண்டும் என்ருல் நீ என்னைக் கொன்று சாப்பிடுவதுதான் ஒரே வழி'' என்ருன்.

இதற்குள் ஓடிப் போன அரச குமாரர்கள் இரண்டு வேடர்களைத் தம்மோடு அழைத்துக் கொண்டு

சிங்கம் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அவர்கள் சிங்கத்தைப் பார்த்ததும் அம்புகளை எய்து அதனைக் கொன்று விட்டார்கள். ஞானமணி அவர்களைத் தடுப்பதற்குள் அது நொடிப் பொழுதில் நடந்து முடிந்து விட்டது.

ஞானமணி இப்படி நடக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. தான் சிங்கத்தோடு பேசிக் கொண்டிருக்கும் போது அது கொல்லப்பட்டது கண்டு மிகவும் மனம் வருந்தினன். அவனுல் அரசகுமார்களைக் கடிந்து கொள்ளவும் முடியவில்லை. நடந்தது நடந்தது தானே! அதை அவனுல் மாற்ற முடியாதே.



சிங்கம் இறந்தது கண்டு அரசகுமாரர்கள் ஆனந்தம் அடைந்தார்கள். ஞானமணி மரத்திலிருந்து இறங்கி வந்ததும் மூத்த அரசகுமாரன் "நாங்கள் உனக்கு நன்றியைச் செலுத்துகிருேம். நம்பினவர்களை எப்படிக் காப்பாற்ற வேண்டும் என்பதை நீ நன்கு அறிந்திருக்கிருய்" என்ருன்.

அப்போது ஞானமணி "இல்லை. இல்லை. எனக்கு ஒன்றும் தெரியாது" என்ருன். அப்போது அந்த அரசகுமாரன் "ஆகா! என்ன தன்னடக்கம்! என்ன பணிவு! நீ செய்த உதவியை எவ்வளவு வேண்டுமாஞலும் பாராட்டலாமே. உன்னை முதலமைச்சராக அல்ல. என் நாட்டின் ஒரு பகுதியின் சிற்றரசனுக்குகிறேன். என் நாட்டில் உனக்கு இணையாக எந்த சிற்றரசனும் இருக்க மாட்டான். நீ மூன்று அரச குமாரர்களைக் காப்பாற்றியது என்பது ஒரு சாதாரணப்பட்ட விஷயமா என்ன?" என்ருன்.

ஞானமணி ஒரு கணம் யோசித்து விட்டு "நீ எனக்குக் கொடுக்கும் இந்த செல்வம் என்னை பரம ஏழையாக ஆக்குகிறது. நீ உங்களைக் காப்பாற்றி அரண்மனைக்குச் சேர்க்க இந்த இரு வேட்டைக்காரர்களையும் கூடவே அழைத்துச் செல். நான் என் குருநாதரின் ஆசிரமத்திற்கே திரும்பிச் செல்கிறேன்" எனக் கூறி அவர்களை அனுப்பி விட்டு ஆசிரமத்திற்கே திரும்பிச் சென்ருன்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "ஞானமணி அரச குமாரர்களைச் சிங்கத்திடமிருந்து காப்பாற்றியது உண்மைதானே. தன்னை நம்பியவர்களைக் காப்பாற்றவில்லை என அவன் கூறியது பொய்தானே. மேலும் புகழும் அதிகாரமும் செல்வமும் பெற அவன் ஆசைப்பட்டவன் தானே. அரச குமாரன் அவனுக்குப் பணமும் பதவியும் அந்தஸ்தும் அளிப்பதாக கூறியும் அதனை அவன் ஏற்காதது அவனது இயல்பிற்கு நேர்மாறாகத்தானே இருக்கிறது? அது தன்னை ஏழையாக்கி விடும் என அவன் கூறியதும் சரியா? இந்தக் கேள்விகளுக்கு நீ சரியான விடைகளைத் தெரிந்து கொண்டிருந்தும் நீ அவற்றை கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

அப்போது விக்கிரமனும் "பசியோடு இருந்த சிங்கத்திடமிருந்து ஞானமணி அரச குமாரர்களைக் காப்பாற்றியது உண்மையே. ஆனால் வாதம் புரிந்து தன்னை நம்பும்படிச் செய்த அவன் சிங்கத்தைக் காப்பாற்ற முடியாது போனேனே. அதனால் தான் நம்பினவர்களைக் காப்பாற்றியது பற்றித் தனக்கு எதுவும் தெரியாது என அவன் கூறினான். உயிரினங்கள் ஏன் உயிர் வாழ வேண்டும் என்ற கேள்வியைச் சிங்கம் அவனிடம் கேட்டபோது அஞ்ஞான இருளிலிருந்து வெளிவந்து மெய்ஞான ஒளியில் பிரவேசிப்பது தான் என்று அவன் பதில் கூறினான். இது அவனுக்குத் தன் வாழ்வின் குறிக்கோள் என்ன என்பதை உணர்த்தி விட்டது. அவன் ஆசிரமத்திற்குத் திரும்பிச் சென்றான். அவனது குருநாதர் விரும்பியபடி அவன் பக்குவ நிலையை அடைந்து விட்டான்" என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மகான்கள் காண விரும்பிய பாரத நாடு

## ஒருமைப்பாடு

நம் நாட்டின் உயர்ந்த தலைவர்களில் ஒருவரான டாக்டர் ராஜேந்திர பிரசாத் 1884ல் பீகார் மாநிலத்தில் பிறந்தவர். நல்ல வருமானமுள்ள வழக்கறிஞர் தொழிலை விட்டுவிட்டு இவர் நாட்டின் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டார். 1950ல் நம்நாடு முழு சுதந்திரக் குடியரசு நாடாக அறிவிக்கப்பட்டதும் பாபு ராஜேந்திரபிரசாத் நம் நாட்டின் முதலாவது ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1952லும் 1957லும் இவர் மீண்டும் இருமுறை அந்த உயர்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1962ல் இவர் அமரரானுர்.

மதுரையில் 1956 ஆகஸ்ட் 16ந்தேதி நடந்த ஒரு கூட்டத்தில் ராஜேந்திர பிரசாத் பின்வருமாறு கூறினுர்.

தற்போதைய உலகில் முப்பத்தாறு கோடி மக்களைக் கொண்ட நம் பாரத நாடு மகத்தான இடத்தை வகிக்கப் போகிறது. எனவே நம்நாடு மறுபடியும் சிறுசிறு நாடுகளாக பிரிந்து போய்விட வேண்டும் என்பதை எண்ணிக்கூட பார்க்க முடியாது. இந்தக் கலியுகத்தில் ஒற்றமையே மிக வலிமை பெற்றது என்பதை நாம் மறந்து விடக்கூடாது. முப்பத்தாறு கோடி இந்தியர்கள் அனைவரும் ஒன்ருக நின்று ஒரே சக்தியாகப் செயல்பட வேண்டும். ஒருமைப்பாடு என்ருல் எல்லோரும் ஒரே நடை உடைபாவனை கொண்டிருக்க வேண்டும் என்பது இல்லை. வேற்றுமையிலும் ஒற்றுமையைக் காண்பதுதான் உண்மையான ஒருமைப்பாடு. இதுதான் நம் நாட்டின் தனிச்சிறப்பாகும்.

## உங்களுக்குத் தெரியுமா?

1. இந்தியா, பிரிட்டன், ஜப்பான் அமெரிக்க சோவியத் ரஷ்யா ஆகிய நாடுகளின் நாடாளும்மன்றங்களின் பெயர்கள் யாவை?
2. உலகிலேயே மிகப் பெரிய நாடு எது?
3. அது எந்த கண்டத்தில் உள்ளது?
4. இரண்டாவது பெரிய நாடு எது? எந்தக் கண்டத்தில் உள்ளது?
5. மூன்ருவது, நான்காவது, ஐந்தாவது, ஆருவது பெரிய நாடுகள் யாவை?

(விடை 36ம் பக்கத்தில்)

# பிள்ளையார்



எந்த வேலையும் தங்கு தடை இல்லாமல் நடந்து வெற்றிகரமாக முடிய வேண்டும் என்று முதலில் பிள்ளையாரை பூசித்து விட்டே சுபகாரியங்களைத் தொடங்குகிறோம். இதனை விக்கினேஸ்வர பூஜை என்று கூறுகிறார்கள். இன்னல்களைப் போக்கி இன்பமுறச் செய்பவர் விக்னேஸ்வரரான கணபதி என்பது பலரது உறுதியான நம்பிக்கை.

கணங்களின் அதிபதி என்பதால் கணபதி என்றும் விநாயகன் என்றும் இவருக்கு மறுபெயர்கள் உண்டு. பார்வதி தேவி உருவாக்கிய விநாயகனை சிவனுக்கும் பார்வதிக்கும் பிறந்த முதல் புதல்வராயும் முருகப் பெருமானின் தமையனாயும் பாவிக்கிறார்

கள். மூஞ்சூறு வாகனம் கொண்டு யானை முகம் இவர் கொண்ட தற்குப் புராணங்கள் பலவிதக் காரணங்களைக் கூறுகின்றன.

சனிப்பகவானின் கோபப் பார்வையால் விநாயகரின் தலை மறைந்தது என்றும் அதற்குப் பதிலாக அவருக்கு ஒரு யானைத் தலை பொருத்தப்பட்டது என்றும் ஒரு கதை உண்டு. இதன் கருத்து யாதாயினும் இவருடைய விசித்திர உருவம் பக்தர்களுக்கு யுகயுக மாக ஆனந்தத்தை அளித்து வருகிறது.

வேண்டும் பக்தர்களுக்கு வெற்றியையும் விவேகத்தையும் இவர் அளிப்பதால் சித்தி, புத்தி என்பவர்கள் இவரது மனைவி கள் என்றும் சிலர் கருதி இவரைப் பூசித்து வருகிறார்கள்.

# அம்புலிமாமா செய்திகள்





## மிகச் சிறிய டெலிபோன்

அண்மையில் ஜப்பானின் மிகச் சிறிய தொலைபேசி யந்திரத்தை கண்டுபிடித்துள்ளார்கள். மிக எளிதாய் 10 அவுன்ஸ் நிறையுள்ளது இது. பார்க்க மிகச் சிறியதாயினும் சாதாரண தொலைபேசியைவிட இது மிகச் சக்தி வாய்ந்தது.

## வெண்மலர்க் காட்சி

ஒரிஸ்ஸாவின் புகழ்பெற்ற நந்தன் கானன் உயிர்காட்சி சாலையின் அருகே வெண்மலர்களின் கண்காட்சி ஒன்று ஏற்பாடு செய்யப்படுகிறது. அந்தப் பூங்காவில் நடந்து உயரமான இடத்திலிருந்து அம்மலர்களைப் பொதுமக்கள் காணலாம்.

# இலக்கிய உலகம்

1. வரலாற்று ஆசிரியரான கிரேக்க ஹெரிடோடஸிற்கு வரலாற்றின் தந்தை என்ற பட்டத்தை அளித்தவர் யார்?
2. ஆங்கில இலக்கியத்தில் பெரியவர்களுக்கு நகைச்சுவையாயும் சிறுவர்களுக்கு இலக்கியமாயும் உள்ள நூல் யாது?
3. மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட இந்திய மொழிகள் எவ்வளவு?
4. அவை யாவை?
5. இந்தியாவில் மிக அதிகமானவர்கள் பேசும் மொழி எது? அதற்கு அடுத்து இடம்பெறும் மொழிகள் நான்கினைக் கூறமுடியுமா?
6. சமஸ்கிருதத்தில் கிடைக்கும் மிகப்பழைய படைப்பு எது?

# விடைகள்

## உங்களுக்குத் தெரியுமா?

1. லோக்சபா, ராஜ்யசபா, ஹவுஸ் ஆப் காமன்ஸ், ஹவுஸ் ஆப் லார்ட்ஸ், டயட், காங்கிரஸ், சுப்ரீம் சோவியத்.
2. சோவியத் ரஷ்யா
3. ஆசியா, ஐரோப்பா கண்டங்களில் உள்ளது.
4. கனடா; வடஅமெரிக்கா
5. சீனு, அமெரிக்கா, பிரேசில், ஆஸ்திரேலியா, இந்தியா

## இலக்கியம்

1. கி.மு முதலாவது நூற்றுண்டில் வாழ்ந்த ரோமானியத் தத்துவ மேதை சிசிரோ.
2. ஜோனதன் ஸ்விப்ட் எழுதிய 'கலிவர்ஸ் ட்ராவல்ஸ்'.
3. பதினைந்து மொழிகள்
4. அஸ்ஸாமி, பெங்காளி, குஜராத்தி, ஹிந்தி, ஒரியா, பஞ்சாபி, கன்னடம், காஷ்மீரம், மலையாளம், மராட்டி, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, உருது, சிந்தி.
5. ஹிந்தி. அதற்கு அடுத்து தெலுங்கு, பெங்காலி, மராட்டி, தமிழ் முதலியன.



உலகப் புராணக் கதைகள்

# சதி முறிந்த விதம்

ஆர்கோஸ் மன்னன் பிரோயடஸின் அரண்மனைக்கு பெல்லிரோபல் என்ற அழகிய இளவரசன் வந்தான். அவனது அறிவையும் அழகையும் கண்ட பிரோயடஸ் பொறாமை கொண்டு அந்த இளவரசனைக் கொல்ல சதி செய்தான்.

ஒருநாள் பிரோயடஸ் அந்த இளவரசனிடம் "நீ மிக வேகமாக குதிரை சவாரி செய்யும் மாவீரன். நீ எனக்காக ஒரு வேலை செய்ய வேண்டும். நான் கொடுக்கும் கடிதத்தை என் மாமனார் லைசியா மன்னரான ஜோபேட்ஸிடம் கொடுக்க வேண்டும்" என்றான். பெல்லிரோபசும் அதைச் செய்வதாகக் கூறி லைசியாவிற்குக் கிளம்பி சென்றான்.





லைசியா மன்னன் அக்கடிதத்தைப் படித்தான். அதில் அக்கடிதம் கொண்டு வரும் வாலிபனைக் கொன்றுவிடுமாறு எழுதப்பட்டிருந்தது. அச்சமயத்தில் அந்த நாட்டு மலை ஒன்றில் ஒரு பயங்கர பூதம் இருந்தது.



மக்களை துன்புறுத்தும் அந்த பூதத்தைப் பற்றி லைசியா மன்னன் அந்த இளவரசனிடம் கூறி அவன் அதனை ஒழிக்க வேண்டும் என்று கட்டளை இட்டான். பெல்லிரோபசும் அப்படியே செய்வதாகக் கூறி அந்த மலைக்குச் சென்றான்.

கிமேரா என்ற அந்த பயங்கர பூதத்திற்கு மூன்று முகங்கள். அவற்றில் ஒன்று சிங்கமுகம். மற்றது ஆட்டின் தலை. மூன்றாவது கோர மனிதத் தலை. அதன் வாயிலிருந்து நெருப்புப் பொறிகள் வந்து கொண்டே இருக்கும். அதனால் யாரும் அதனை அணுக முடியாது.





அந்த பயங்கர பூதத்தை எதிர்க்கத் தனக்கு சக்தி அருள வேண்டும் என்று இளவரசன் பெல்லிரோபஸ் மினர்வா தேவதையை வேண்டினான். அத் தேவதையும் அவன்முன் தோன்றி அவனுக்கு வேகாநஸ் என்ற இறக்கைக் குதிரையை அளித்தது.

மின்னல் வேகத்தில் பறந்து செல்லும் அக்குதிரைமீது பெல்லிரோபஸ் அமர்ந்து மிகுந்த உற்சாகத்துடன் அந்த பூதத்தை எதிர்க்கச் சென்ருன்.





அவன் அக்குதிரை மீது அமர்ந்தவாறே அந்த பூதத்தோடு சண்டையிட்டான். அப்பூதம் கக்கிய நெருப்புப் பொறிகளிலிருந்து தப்பி அதன் மீது பறந்து தன் ஆயுதத்தால் அதனைக் குத்திக் கொன்ருன்.

பூதத்தைக் கொன்று விட்டு வெற்றியுடன் திரும்பி வந்த பெல்லிரோபஸை லீசியா மன்னன் அமோகமாக வரவேற்ருன். ஆனல் அவனை எப்படிக் கொல்வது என்றே அவன் மனம் எண்ணமிட்டது.





பெல்லிரோபஸின் துணிச்சலை யும் வீரத்தையும் கண்டு லேசியா மன்னனின் மகள் அவனைப் பெரிதும் விரும்பினாள். இதைக் கண்ட லேசியா மன்னன் முடிவில் தன் மகளை அந்த இளவரசனுக்கு மண முடித்து வைக்கத் தீர்மானித்தான்.

பெல்லிரோபஸிற்கும் லேசியா மன்னனின் மகளுக்கும் விமரிசையாக விவாகம் நடைபெற்றது. இதனை அறிந்த ஆர்கோஸ் மன்னன் பிரோயடஸ் தன் சதி முறிந்து போனது கண்டு மனம் புழுங்கினான். அவன் அந்த விவாகத்திற்குப் போகாமலும் இருக்க முடியவில்லை.





ஜோபேடஸ் மன்னனுக்கு ஆண் சந்ததி இல்லாது போனதால் அவன் இறந்த பிறகு லேசியா மன்னனுக்குப்பின் பெல்லிரோபஸ் அரியாசனத்தில் அமர்ந்தான். அவன் மக்களுக்கு எவ்விதக் குறையும் இல்லாமல் நீண்ட காலம் ஆட்சி புரிந்தான்.



# சரியான சூடு!

கணியூரின் கிராம அதிகாரி கண்ணப்பன். அவன் மிகவும் கொடியவன். பிறரைச் சொல்லால் துன்புறுத்தி இகழ்ந்து மகிழ்பவன். அதே ஊரில் பச்சையப்பன் என்ற அப்பாவி இருந்தான். அவனைக் கண்ணப்பன் அழைத்து "நீ தினமும் காலையில் என் வீட்டு வேலைகளைச் செய்தால் கடவுள் உனக்கு நல்வாழ்வு கொடுப்பார்" என்ருன். பச்சையப்பனும் அதை நம்பி எவ்வித ஊதியம் பெருமல் கண்ணப்பனின் வீட்டு வேலைகளைச் செய்யலானுன்.

அதே ஊரில் சோமய்யா என்ற வைத்தியர் இருந்தார். அவர் எல்லோருக்கும் வைத்தியம் செய்து அவர்கள் கொடுத்த பணத்தை முகம் சுளிக்காமல் வாங்கி கொண்டு வந்தார். அதைக் கேலி செய்து கண்ணப்பன் "இந்த சோமய்யன் முன் பிறப்பில் பலரிடம் கடன் வாங்கியவன். அந்தக் கடனைத் தீர்க்கவே இப்படி வைத்தியம் செய்து வருகிருன்" என்று எல்லோரிடமும் கூறி வந்தான்.

அவ்வூர் பள்ளி ஆசிரியர் பள்ளிக் கூடத்தில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது அங்கு போய் "மனிதன் இறந்த பிறகு பேய் உருவாகி ஆசிரியராக மாறி சிறுவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க வந்து விடுகிருன்" என்ருன். அதைக் கேட்டுப் பள்ளிச் சிறுவர்கள் சிரித்தார்கள்.

இப்படி கண்ணப்பன் யாரைக் கண்டாலும் ஏதாவது ஒன்றைக் குத்தலாகவும் கேலியாகவும் சொல்வான். கிராம அதிகாரியாதலால் அவனைத் தட்டிக் கேட்க யாரும் துணியவில்லை.

அந்த ஊர் கோவில் அர்ச்சகர்

-ரம்யா குருமூரத்தி-




என்று கூறிக் கொண்டே போய் விட்டான்.

அப்போது ராமய்யா கோவிந்தய்யாவிடம் "யார் இவன்? கொஞ்சம் கூட மட்டுமரியாதை இல்லாமல் வாய்க்கு வந்த படிப் பேசுகிறனே" என்று கேட்டான். கோவிந்தய்யாவும் "இவன் இவ்வூர் கிராம அதிகாரி இவன் போக்கே இப்படித்தான்." என்றான்.

ராமய்யாவும் "அப்படியா! இப்படிப்பட்டவர்களை இப்படியே விட்டு வைத்தால் மேலும் மேலும் துள்ளுவார்கள். இவனுக்கு நான் ஒரு பாடம் கற்பிக்கிறேன். நல்ல வேளை. இந்தத் திருவிழாவின் போது நான் இங்கு வந்ததும் நன்றாகப் போயிற்று" என்றான்.

அவ்வூர்த் திருவிழாவில் ஒரு நாள் ஊரில் உள்ளவர்கள் எல்லாம் ஒன்று கூடி ஒரு விசேஷ ரகப் பானத்தைக் குடிப்பது வழக்கம் அந்தப் பானத்தைக் குடித்தால் ஒரு வருட காலத்திற்கு எந்தக் கவலையும் இல்லாமல் இருக்கலாம் என்பது அவ்வூராரின் நம்பிக்கை.

அந்தத் திருவிழா நடந்த இரவில் வழக்கம் போல எல்லாரும் கூடிப் பானம் அருந்தினார்கள். ராமய்யாவும் அதில் கலந்து கொண்டான். அவன் கிராம அதிகாரி கண்ணப்பனின் பக்கத்தில் தான் உட்கார்ந்திருந்தான்.

மறுநாள் ராமய்யா கண்ணப்

கோவிந்தய்யா. அவரைக் காண ஒரு முறை ராமய்யா என்ற அவரது தூரத்து உறவினன் வந்தான். இருவரும் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவ்வழியே கண்ணப்பன் வந்தான்.

அவன் "என்ன அர்ச்சகரே! ஏன் இப்படி ஒப்பாரி வைக்கிறீர்கள்? என்ன நடந்து விட்டது? என்னிடம் சொல்லி இருந்தால் உதவி செய்திருப்பேனே" என்றான்.

அப்போது ராமய்யா "நானும் இவரும் சிரித்துப் பேசிக் கொண்டு தானே இருக்கிறோம். இவர் அழவில்லையே!" என்றான். கண்ணப்பனே "இந்த அர்ச்சகர் சிரிப்பதே அழுவது போலத்தான் இருக்கும்"

பனைக் கண்டு "நேற்றிரவு குடித்த பானத்தால் உங்களுக்கு ஒரு தவறு இழைத்து விட்டேன். அதற்காக ஊரைக் கூட்டி எல்லோர் முன்னிலே யிலும் உங்களிடம் மன்னிப்புக் கேட்கப் போகிறேன். எல்லோரை யும் ஒன்று கூட்டுங்கள்" என்ருன். கண்ணப்பனும் அது கேட்டு உச்சி குளிர்ந்து ஊராரைக் கூட்டினன்.

எல்லோரும் வந்ததும் ராமய்யா "மகாஜனங்களே! கேளுங்கள். இந்த ஊர்ப் பச்சையப்பனுக்கு கண்ணப் பர் கூலி கொடுக்காமல் ஏமாற்றி வேலை வாங்குகிருர் என்று நான் திட்டினேன். கிராம பள்ளி ஆசிரி யரைப் பேய் என்று கூறிய பாதகன் என்று கூறி பல வசைச் சொற்க ளால் இவரைக் கண்டபடி திட்டி னேன். இப்படி நான் திட்டியது சுயநினைவில் இருக்கும் போது அல்ல. நேற்றிரவு குடித்த பானத் தால் அறிவு இழந்து விட்டேன் போலிருக்கிறது. இவரை ஏமாற்று பவன், சிராதகன், பாதகன் என்றெல் லாம் திட்டியது சரியா? இல்லை என்ருல் இவரிடம் நான் மன்னிப் புக் கேட்கத் தயார்" என்ருன்.

அப்போது ஊர்பிரமுகர் "நீ போதையில் கூறவில்லை. நீ நேற்று எதுவுமே இந்தக் கண்ணப்பனி டம் கூறவில்லையே. நானும் உன் பக்கத்தில் தானே இருந்தேன்" என்ருர். அப்போது கண்ணப்பன் "இந்த விஷயம் எல்லாம் இவ னுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கோபத்தோடு கேட்டான். ராமய்யாவும் "ஏன் தெரியாது? ஊரே இதைப் பற்றிப் பேசி உனக் குப் பின்னல் சிரிக்கிறதே. ஒரு சிறு குழந்தை கூட நான் கூறியது போல உன்னைப் பாவி என்றும் பாதகன் என்றும் கூறுகிறதே!" என்ருன்.

கண்ணப்பன் எதுவும் பேச முடியாமல் தலை குனிந்து நின் ருன். அப்போது முதல் பிறரைக் கேலியாகவும் குத்தலாகவும் பேசு வதை விட்டு விட்டான்.



# சொல் வீரன்

விதர்ப மன்னனிடம் தூது கொண்டு செல்ல வித்தியாபதி என்பவன். வந்தான். அவன் நன்கு பேசி எதிராளியை மடக்கக் கூடியவன். அவன் விதர்ப்ப மன்னனிடம் "அரசே! உங்கள் நாடு பசுமை படர்ந்து மிகவும் செழிப்பாக உள்ளது. ஆனால் உங் கள் நாட்டில் அறிவற்றவர்களின் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது. இப்போது அப்படிப்பட்டவர்கள் நூற்றுப் பனிரெண்டு பேர்கள் இருக்கிறார்கள்" என்றான்.

மன்னன் தன் நாட்டை நூற்றுப் பனிரெண்டு மண்டலங்களாகப் பிரித்து அவற் றிற்கு ஆட்சி அதிகாரிகளை நியமித்திருந்தான்; அவர்களைத்தான் அறிவற்றவர்கள் என அத்தூதன் சுட்டிக் காட்டுகிறான் என்பது தெரிந்து விட்டது. மன்னன் புன்னகை புரிந்து விட்டுப் பேசாமல் இருந்தான்.

ஆனால் ஆஸ்தான விதூஷகன் எழுந்து "அரசே! இவர் கணக்கு தப்பு. இப்போது நம் நாட்டில் அறிவற்றவர்கள் நூற்றுப் பதிமூன்று பேர்கள் இருக்கிறார்கள்" என்றான். மன்னனும் "அப்படியானால் நீ அதிகப் படியாகக் கண்ட அந்த ஒருவன் யார்?" என்று கேட்டான்.

விதூஷகனும் "வேறுயாரும் இல்லை இந்தத் தூதன் தான் அவன். உங்களைப் புகழ்ந்து பரிசு பெற முயன்றான். புகழுக்கு மசியாத தங்களை இவன் புகழ்ந்தது அறிவற்ற செயல் தானே!" என்று கூறி கம்பீரமாக வித்தியாபதியைப் பார்த்தான்.

வித்தியாபதியும் "அரசே! நான் பரிசிற்காக ஆசைப்பட்டேனா அல்லது இல்லையா என்பது வேறு விஷயம். ஒரு வேளை நீங்கள் பிசளித்தாலும் அது என் வாக்கு சாதுரியத்தைப் பாராட்டித்தான் இருக்குமேயொழிய நான் தங்களைப் புகழ்ந்தேன் என்பதற்காக இராது என்பது எனக்கு நன்கு தெரியும். வனம் மிகுந்த தங்கள் நாட்டைப் பார்த்த பின் அதைப் பாராட்டாமல் நான் போனால் நான் அறிவற்றவனே ஆவேன். மேலும் அறிவற்றவர்களைக் கண்ட உண்மையைக் கூறாமல் நான் மறைப்பதும் சரியல்லவே" என்றான்.

மன்னன் வித்தியாபதியின் நோக்கத்தைப் பாராட்டிப் பரிசு அளித்ததோடு தன் நிர்வாகத்தையும் சீர்திருத்தினான்.






சீதையைப் பற்றிய தகவலைச் சம்பாதி கூறியபோது வானரர்கள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. அவர்கள் இலங்கைக்குப் போவதற்காகக் கடற்கரையை அடைந்தார்கள். ஆனுல் அங்கு போய்ச் சேர்ந்ததும் அவர்கள் மலைத்து நின்ருர்கள். பரந்த கடலைக் கண்டதும் அதில் எழும் மாபெரும் அலைகளையும் பயங்கர ஜீவராசிகளையும் நினைத்து பயந்து போனுர்கள். மேலும் அதன் எதிர்க்கரை எங்கே இருக்கிறது என்பதும் அவர்களுக்குத் தெரியவில்லை.

அவர்கள் என்ன செய்வது என்று யோசிக்கையில் அங்கதன் அவர்களைப் பார்த்து ''பயப்படாதீர்கள். பயத்தால் எவ்விதப் பயனுமில்லை. மேலும் அது நம்மைச் செயலற்றுப் போகச் செய்து விடும். இப்போது நாம் நம் சக்தியைக் காட்ட வேண்டிய நேரம். எனவே நாம் சோர்வு அடையாமல் செயலில் இறங்குவோம்'' என்ருன்.

அங்கங்கே இருந்த வானரர்களை எல்லாம் ஓரிடத்தில் வந்து கூடும்படி அங்கதன் கட்டளை இட்டான். எல்லா வானரர்களும் வந்ததும் அங்கதன் ''நம்மில் யார் இந்தக் கடலைத் தாண்டி இலங்கைக்குப் போய் சீதா தேவியைக் கண்டு திரும்பி வரக் கூடியவன்? இங்கிருந்து இலங்கை நூறு யோசனை தூரத்தில் உள்ளது. இந்த இடைவெளியைக் கடந்து சென்று திரும்பி வருபவன்தான் நம் தலை எழுத்தை நிர்ணயிக்கப்

**–அனுமார் இலங்கைக்குக் கிளம்பினுர்–**



போகிறவன். அவன் அப்படிச் செய்தாலே நாம் சுக்கிரீவன் முகத்தில் முழிக்க முடியும். நம் மனைவி மக்களை மீண்டும் காணமுடியும். எனவே யாரால் இந்த இடைவெளியைக் கடக்க முடியும் என்பதைக் கூறுங்கள்'' என்றான்.

யாரும் எதுவும் பேசாமல் இருந்தனர். அப்போது அங்கதன் ''எல்லோரும் பேசாமல் இருந்தால் எப்படி? நீங்கள் எல்லோருமே சக்தி வாய்ந்தவர்கள். பலம் படைத்தவர்கள். பேரும் புகழும் படைத்தவர்கள் நற்குடியில் பிறந்தவர்கள். வேகமாகச் செல்லக்கூடியவர்கள். எனவே நீங்களே உங்களது சக்தி எவ்வளவு என்று ஒவ்வொருவராகக் கூறுங்கள்'' என்றான்.

அதைக் கேட்டபின் வானர வீரர்கள் ஒவ்வொருவராகத் தம் சக்தி பற்றிக் கூறலானார்கள். கஜன் தன்னால் ஒரே தாண்டில் பத்து யோசனை தூரம் தாண்ட முடியும் என்றான். கவாட்சன் இருபது யோசனைகள் என்றும், சரபன் நாற்பது யோசனைகள் என்றும் கந்தமாதனன் ஐம்பது யோசனைகள் என்றும் மைந்தன் அறுபது யோசனைகள் என்றும் துவிதீயன் எழுபது யோசனைகள் என்றும், சுசேனன் எண்பது யோசனைகள் தாண்ட முடியும் என்றும் கூறினார்கள்.

ஜாம்பவானும் ''நானென்னவோ தொண்ணூறு யோசனை தூரத்தைத் தாண்டி விடுவேன். இப்போது கிழவனாகி விட்டேன். ஆனாலும் இராமரது திருப்பணியில் ஈடுபடும் போது என்னால் எப்படியாவது தொண்ணூறு யோசனைகள் தாண்டி விட முடியும்'' என்றான்.

அவர்கள் சொன்னதை எல்லாம் கேட்ட அங்கதன் ''நான் இந்த நூறு யோசனை தூரத்தைத் தாண்டி விடுவேன். ஆனால் திரும்பி நூறு யோசனைகள் தாண்டி வர முடியுமா என்பது சந்தேகமே'' என்றான். அதைக் கேட்ட ஜாம்பவான் ''உன் சக்தி பற்றி எங்களுக்குத் தெரியாதா என்ன? நூறென்ன, ஆயிரம் யோசனைகளைக் கூட மிக எளிதாக உன்னால் தாண்டி விட முடியும். அதில் யாருக்கும் எள்ளவும் சந்தேகமே இல்லை.

நீ எங்களது மன்னன். அதனுல் இந்த வேலையைச் செய்ய நாங்கள் அனுமதிக்க மாட்டோம். நீ எங்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பு. அதுதான் முறை. உன்னைப் பாதுகாக்க வேண்டியது எங்கள் கடமை. மன்னனுகிய நீ போய் விட்டால் எங்களை யார் கவனித்துக் கொள்வதாம்? எனவே நீ போகக் கூடாது'' என்ருன்.

அப்போது அங்கதன் "இதென்ன கூற்று? நானும் இலங்கைக்குப் போகக்கூடாது, உங்களில் யாரும் போக முடியாது என்ருல் நாம் எல்லோரும் இங்கேயே கடலில் விழுந்து மடிந்து போக வேண்டியது தானு? நாம் எடுத்துக் கொண்ட வேலையை முடிக்காமல் கிஷ்கிந்தைக்குப் போனுலும் சுக்கிரீவன் நம்மைக் கொல்லத்தான் போகிருன். எனவே எல்லோரையும் மரணத்திலிருந்து தப்புவிக்க வயதில் முதிர்ந்தவரான நீங்கள்தாம் ஒரு வழியைச் சொல்ல வேண்டும்'' என்று ஜாம்பவானிடம் கூறினுன்.

ஜாம்பவானும் அங்கதனிடம் "இந்தத் திருப்பணி நடந்தே தீரும். இந்த வேலையைச் செய்து முடிக்கப் போகிறவன் அதோ இருக்கிருன் பார்'' என்று கூறி சற்று தூரத்தில் அமைதியாக உட்கார்ந்திருந்த அனுமாரைச் சுட்டிக் காட்டினுன். பிறகு ஜாம்பவான் "அவனது சக்தி பற்றி அவனுக்கே தெரியாது. நாம் சொல்



லச் சொல்ல அது பெருகும்'' எனக்கூறி அனுமாரை நோக்கிச் சென்ருன்.

ஜாம்பவான் அனுமாரைப் பார்த்து "அனுமானே! நீ வானர வீரர்களிலெல்லாம் மிகச் சிறந்தவன். எல்லா சாஸ்திரங்களை நன்கு கற்றவன் ஆனுலும் நீ வாய்திறக்காமல் அமைதியுடன் அமர்ந்திருக்கிருய். இது சரியா? கருடனின் இறக்கைகளுக்குள்ள பலம் உன் இரு புஜங்களுக்கும் உள்ளது. பலத்தில் நீ சுக்கிரீவனுக்கும் இலட்சுமணனுக்கும் சற்றும் குறைந்தவன் அல்ல. உன்னை எதிர்க்க எந்த ஜீவ ராசியாலும் முடியாது. இது உனக்குத் தெரியாதா என்ன! நீ பிறந்ததுமே சூரியனைப் பார்த்து பழம் என்று



நினைத்து அவனைக் கவ்வ ஆகாயத்தில் கிளம்பிச் செல்லவில்லையா? உன்னைப் போலக் குதித்துத் தாண்டுபவன் யாரும் இல்லை. உன் சக்தியை எல்லோரும் அறிய நீ இப்போது உன் சக்தியைக் காட்டு'' என்றான்.

ஜாம்பவான் இப்படிச் சொல்லச் சொல்ல அனுமாரின் உடல் பருத்து பெரிதாகவும் உயரமாகவும் ஆகிக் கொண்டே போயிற்று. அதைக் கண்ட மற்ற வானரர்களும் மகிழ்ந்து உற்சாகத்துடன் அனுமாரைப் புகழ்ந்தார்கள். அனும்மார் வாமனராக வந்த மகாவிஷ்ணு மாபெரும் உருவம் எடுத்தது போல மிகப் பெரிய உருக் கொண்டுவிட்டார்.

அனுமார் தன்னிலும் வயதில் முதிர்ந்த வானரர்களை வணங்கி ''நான் கடலைக் காற்று வேகத்தில் கடக்கிறேன். நடுவில் எங்கும் நிற்கவே மாட்டேன். நான் சூரியோதயம். ஆகும்போது சூரியனோடு கிளம்பி ஆகாயத்தில் சஞ்சரித்து அவன் மேற்கு திசையை அடையு முன் நான் அடைந்து விட்டு திரும்பி வந்து அவனை வழியில் சந்திக்கும் சக்தி பெற்றவன். நான் ஆகாயத்தில் செல்லும் போது மேகங்கள் சிதறிவிடும். மலைகள் அதிரும். நான் சீதாதேவியை எப்படியும் பார்த்துவிட்டே வருவேன். இப்போது பல நல்ல சகுனங்கள் ஏற்படுவதையும் காண்கிறேன். முடிந்தால் இலங்காபுரியையே பெயர்த்து வேண்டுமானாலும் கொண்டு வருகிறேன்'' என்றார்.

அப்போது ஜாம்பவான் ''அனுமானே! நீ எங்கள் எல்லோருடைய பயத்தையும் போக்கிவிட்டாய். நீ எடுத்த வேலையை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு வர வேண்டும் என்று நாங்கள் பிரார்த்திக்கிறோம். எங்கள் நல்லாசிகளுடன் நீ கடலைக் கடந்து இலங்கைக்குப் போய் வெற்றியுடன் திரும்பிவர உன்னைத் தான் நாங்கள் எல்லோரும் நம்பி இருக்கிறோம்'' என்றான்.

அனுமாரும் ''நான் சமதரையில் நின்று ஆகாயத்தில் எம்பும் போது தரைபாளங்களாக வெடித்து பள்ளமாகி விடும். அதனால் மகேந்திர மலை மீதிருந்து தாவிச் செல்கிறேன்''

என்று கூறிவிட்டு வேகமாக அந்த மலைமீது ஏறி அதன் உச்சியை அடைந்தார்.

அந்த மலை உறுதியானது என அவர் காண அதை அசைத்துப் பார்த்தார். மலை உருக்குலையாமல் நின்றது. ஆனால் அதிலிருந்த மரங்கள் சாய்ந்தன. கற்கள் உருண்டன. குகைகளிலிருந்து மிருகங்கள் அலறின. ரிஷி முனிவர்கள் நடுநடுங்கினார்கள். வித்தியாதரர்கள் தம் மனைவிகளுடன் எங்கோ ஓடி மறைந்தார்கள்.

அனுமார் கால்களைப் பரப்பி, கைகளைக் கட்டிக் கொண்டு வாலை நீட்டிக் கொண்டு உயரக் கிளம்பத் தயாரானார். அவர் வானரர்களைப் பார்த்து "நான் இலங்கைக்குப் போகிறேன். அங்கு சீதா தேவியைக் காணா விட்டால் நேரே சொர்க்கத்திற்குப் போகிறேன். அங்கும் சீதா தேவியைக் காணா விட்டால் நான் திரும்ப இலங்கைக்குப் போய் இராவணனைக் கட்டிப் பிடித்து வருகிறேன்" என்றார்.

இதற்குப் பின் அவர் உயரக் கிளம்பி ஆகாயத்தில் சென்றார். அவரோடு பல மரங்களும் உயரப் பெயர்ந்து சென்றன. அவற்றின் மலர்கள் அனுமார் மீதும் கடலின் மீதும் விழுந்தன. அவர் உடல் ஒளி ஆகாயத்தில் ஒரு அற்புதக் காட்சியை உண்டாக்கியது. அவரது கண்கள் சூரிய, சந்திரர்களைப் போல



மின்னின.

அனுமார் காற்றில் நீந்திக் கொண்டே சென்றது பெருத்த சத்தத்தை உண்டாக்கியது. அவர் ஒரு வால் நட்சத்திரம் போல் விளங்கியது இலங்கைக்கு அழிவு காலம் என்பதைக் காட்டுவது போல இருந்தது.

அனுமார் சென்ற வேகத்தில் கீழே கடல் அலைகள் உயர எழும்பின. சமுத்திர ராஜனும் அனுமாரைப் பார்த்துத் தன் மனதில் "நான் அனுமாருக்கு உதவ வேண்டும். இவர் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த இராமருக்குத் திருப்பணி செய்யவே போகிறார். என்னை உயர்வாக்கிய சகர மன்னன் இக்ஷ்வாகு குலத்தில் தோன்றியவன்



செல்லப் போகிருர். அவரை நீ தடுத்து நிறுத்த உன் தங்கச் சிகரங்களை கடல் மட்டத்திற்கு மேல் புலப்படும்படிச் செய்து அனுமார் அதன் மீது தங்கும்படி செய்!'' என்ருன்.

உடனே மைநாகம் மலை கடலின் உள்ளிருந்து தன் சிகரங்களை நீர் மட்டத்திற்கு மேல் நீட்டியது. கடலின் நடுவே ஒரு சூரியன் உதிப்பது போல அது காட்சி அளித்தது. கடலின் நடுவே ஒரு மலை உயர்ந்து தன் வழியை மறிக்கப் போவதை அனுமார் கண்டார். அதனுல் கோபம் கொண்டு அவர் பயங்கரமாகக் கர்சித்து அந்த மலைச் சிகரத்தைத் தன் மார்பால் உந்தித் தள்ளினுர்.

அனுமாரின் பலத்தைக் கண்ட மைநாகன் ஆச்சரியப்பட்டான். அவன் மானிட உருவில் அனுமார் முன் தோன்றி ''அனுமாரே! உங்கள் பலத்தை என்ன என்று கூறுவது? யாராலும் கடக்க முடியாத கடலை நீங்கள் அநாயாசமாக கடந்து மிகுந்த பலத்துடன் என் சிகரங்களை அமிழ்த்தி விட்டீர்கள். அப்போதும் நீங்கள் களைத்துப் போய்விடவில்லை. நீங்கள் சற்று நேரம் என் சிகரத்தில் இருந்து இளைப்பாறி விட்டுப் போங்கள். சமுத்திரராஜன் இராமரின் முன்னுேர்களான சகர மன்னனின் உதவியைப் பெற்று உயர்ந்தவன். அவரது சந்ததிகளாலும் உயர்வு பெற்றவன். அதனுல்தான் இராம

தானே. அவர் பெயரைக் கொண்டு தானே எனக்குச் சாகரம் என்ற பெயர் ஏற்பட்டது. சாகரம் என்பது சமுத்திரத்தின் மறுபெயராகிவிட்டது. நான் இந்த அனுமார் நடுக் கடலில் தங்கி இளைப்பாறி விட்டுப் போக ஏற்பாடு செய்கிறேன்'' என எண்ணினுன்.

சமுத்திர ராஜன் மைநாகம் என்ற பர்வதத்தை அழைத்து ''மைநாகா! ராட்சஸர்கள் பாதாளத்திலிருந்து மேலே வரக் கூடாது என்பதற்காக அந்த வழியை மறைத்து நிற்கும்படி உனக்கு இந்திரன் கட்டளை இட்டான். நீ நீர் மட்டத்திற்கு மேல் இப்போது உயர்ந்து வரவேண்டும். அனுமார் நீ இருக்கும் இடத்தின் மீது ஆகாயத்தில் உயரப் பறந்து

காரியத்தை மேற்கொண்டு செல்லும் உங்களை இங்கே தங்க வைத்து உபசரிக்கும்படி என்னிடம் கூறி இருக்கிறான். அதனால் நீங்கள் இங்கு சற்று நேரம் தங்கி விட்டுத்தான் போக வேண்டும்'' என்று கூறினான்.

மைநாகன் சொன்னதைக் கேட்டு அனுமார் ஆச்சரியப்பட்டார். சமுத்திர ராஜனே மைநாகத்திற்குக் கட்டளை இட்டார் என்பதைக் கேட்டதும் அவரது ஆவல் அதிகரித்தது. மைநாகன் மேலும் என்னவெல்லாம் சொல்லப் போகிறான் என்பதை அவர் கேட்க விரும்பினார்.

அனுமாரும் ''சரி. நீ எப்படி இங்கு வந்தாய்? அதைச் சொல்'' என்று கேட்க மைநாகனும் தன்னைப் பற்றிக் கூறலானான்.

''வாயுதேவனின் புதல்வர் என்ற காரணத்திற்காகவும் நான் உங்களை உபசரித்தாக வேண்டும். கிருத யுகத்தில் மலைகளுக்கு இறக்கைகள் இருந்தன. அவை ஆகாய மார்க்கமாய்ப் பறந்து செல்வது கண்டு தேவர்களும் ரிஷிகளும் அவை தம்மீது விழுந்து விடுமோ என்று பயந்தார்கள். அதை அறிந்த தேவேந்திரன் தன் வச்சிராயுதத்தால் பல்லாயிர மலைகளின் இறக்கைகளை வெட்டி வீழ்த்தினான். அவன் என் இறக்கைகளையும் வெட்ட வந்த போது வாயு தேவன் என்னை வெகுதூரம் தள்ளிக் கொண்டு போய் சமுத்திரத்தில் வீழ்த்தி என்னைக் காப்பாற்றினான். அதனால் தான் வாயுதேவனுக்கும் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். எனவே நீங்கள் என் உபசரிப்பை ஏற்று என்னை கௌரவிக்க வேண்டும். உங்கள் தரிசனம் என் பாக்கியம்'' என்றான்.

அனுமார் சற்று யோசிக்கலானார். தான் ஏற்று வந்த வேலை எளிதானது அல்ல. அதை விரைவில் முடித்து விட்டு திரும்பி வானரர்கள் இருக்கும் இடத்தை அடைய வேண்டும். ஆம். இனி கொஞ்சமும் தாமதிக்கக் கூடாது.






மணலூரில் மருதப்பன் என்பவன் தேங்காய் விற்றுப் பிழைத்து வந்தான். அவன் விவாகமானதும் தன் மனைவி முத்தம்மாளைத் தன் ஊருக்கு அழைத்து வந்து விட்டான். அவளும் வந்த மறுநாளே தன் கணவனிடம் "இன்று சாயங்காலம் சீக்கிரம் வந்து விடுங்கள். கோவிலுக்குப் போகலாம்" என்றாள்.

அதைக் கேட்ட மருதப்பன் கோபத்தோடு "இப்போதே உத்தரவு போட ஆரம்பித்து விட்டாயா? அதுதான் இங்கே நடக்காது. நான் என் இஷ்டம் போல் எப்போது வேண்டுமானாலும் வருவேன், போவேன். என்னை இங்கே வா, அங்கே போ என்றெல்லாம் நீ அதிகாரம் செய்யக் கூடாது. உன் வேலை வேளா வேளைக்குச் சமைத்துப் போடுவது, பாத்திரம் பண்டம் துணிமணிகளை சுத்தமாக வைத்து வீட்டைப் பெருக்கி மெழுகி அப்பழுக்கு இல்லாமல் வைப்பதுதான். தெரிந்ததா?" என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

முத்தம்மாள் திகைத்துப் போனாள். அவளுக்கு அவன் கணவன் போக்கு பிடிபட இரண்டு வாரங்கள் பிடித்தன. கண்டிப்பான பேச்சு. எதிலும் ஒழுங்கு கட்டுப்பாடு என்பது அவன் கொள்கை. மனைவியிடம் சற்று அதிகம் பேசி அன்பு செலுத்திவிட்டாள் அவள் தலைக்கு மேல் ஏறி உட்கார்ந்து விடுவாள் என்பது அவன் நினைப்பு. அவன் தான் நினைப்பதே நடக்க வேண்டும் என்றும் அதை எதிர்த்து ஒரு வார்த்தை கூட பேசக் கூடாது எனவும் எண்ணியது அவளுக்குப் புரிந்தது.

ஒருநாள் சாயந்திரம் மகாலிங்கம் என்பவர் முத்தம்மாளை பார்க்க வந்தார். அவர் அவளது ஊரான

—சிவனார் செல்வன்—



சிவன் மலைக் கோவில் அர்ச்சகர். அவளது விவாகத்தின் போது அவர் ஊரில் இருக்கவில்லை. அதனால் முத்தம்மாளையும் மருதப்பனையும் பார்த்துவிட்டுப் போக வந்தார். முத்தம்மாள் வீடு தேடி வந்த அவரை வரவேற்று உட்கார வைத்தாள்.

பிறகு அறைக்குள் இருந்த தன் கணவனிடம் "எங்கள் ஊர் மலைக் கோவில் அர்ச்சகர் வந்திருக்கிறார். அவரைப் பார்த்துப் பேசுங்கள். அவர் சாப்பிடப் பாலும் பழமும் கொடுக்கலாமா?" என்றாள்.

மருதப்பனோ "வழியில் போவோரிடம் எல்லாம் பேச எனக்கு நேரம் இல்லை. கண்டவர்களுக்கு எல்லாம் சாப்பிட இங்கே எதுவும் கொடுக்கக் கூடாது" என்று கோபமாகக் கூறினான். முத்தம்மாவோ "கொஞ்சம் மெதுவாகப் பேசுங்கள். வந்தவர் காதில் விழப் போகிறது" என்றாள்.

ஆனால் மகாலிங்கம் அவர்கள் பேசியதைக் கேட்டு விட்டார். அவர் உரத்த குரலில் "முத்தம்மா! நான் போய் வருகிறேன். என்னால் உனக்கு சிரமம் எதுவும் வேண்டாம்" எனக் கூறிக் கிளம்பினார். முத்தம்மாள் ஓடோடி வந்து "தயவு செய்து இங்கு நடந்ததை மறந்து விடுங்கள். என் தாய் தந்தையரிடம் தவறிப் போய்க் கூடச் சொல்லி விடாதீர்கள்" என்று வேண்டிக் கொண்டாள்.

மகாலிங்கமும் "கவலைப்படாதே பெண்ணே! அந்த சிவனே உன் கஷ்டங்களைப் போக்குவார்" என்று கூறிவிட்டுச் சென்றார். இதற்குப்பின் ஒரு மாதம் கழிந்தது. மகாலிங்கம் மறுபடியும் முத்தம்மாளைக் காண அவளது ஊருக்கு வந்தார். அப்போது மருதப்பன் வீட்டில் இருந்தான். அவன் அவரைக் கண்டதும் "நீங்கள் மகாலிங்கம்தானே! போன மாதம் என் வீட்டிற்கு வந்தவர் தானே?" என்று கேட்டான்.

அவரும் "ஆமாம் அப்பனே. நான் சிவன் மலைக் கோவில் அர்ச்சகர் மகாலிங்கமே தான். நான் ஒரு விஷயம் சொல்லிப் போக வந்தேன். எங்கள் கோவில் மண்டபத்தில் தேங்காய்க் கடை ஒன்றை வைக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். அந்தக் கடையை நடத்துபவருக்கு இருக்க

சிறு வீடும் கோவிலை ஒட்டிக் கொடுக்கப் போகிறார்கள். தின மும் குறைந்தது ஐம்பது தேங்காய் களாவது விலை போகும். கூடவே ஊதுவத்தி, பழம், வெற்றிலை என் றும் தட்டோடு கொடுக்கலாம். நல்ல வியாபாரம் நடக்கும். நீ நம் ஊர் மாப்பிள்ளையாயிற்றே. இந்தக் கடையை நீ ஏற்று நடத்தினால் நீ வசதியாக வாழலாமே என நினைத்தே இந்த விஷயத்தைச் சொல்லி உன் அபிப்பிராயம் என்ன என்று தெரிந்து கொள்ள வந்தேன். நீ வேண்டுமானால் வந்து இடத்தைப் பார். அதன் பிறகு நீ சம்மதித்தால் நான் கோவில் தர்மகர்த்தாவிடம் சொல்லி உனக்குக் கடை நடத்த அனுமதி வாங்கித் தருகிறேன்'' என்றார்.

மருதப்பனுக்கும் அது நல்ல யோசனையாகப் பட்டது. அவன் உள்ளே இருந்த தன் மனைவி முத் தம்மாளைக் கூப்பிட்டான். அவளி டம் மகாலிங்கம் கூறியதைச் சொல்லி ''நான் இவரோடு சிவன் மலைக் குப் போய் வருகிறேன். வீட்டைப் பார்த்துக் கொள்'' என்று கூறி விட்டுக் கிளம்பினான்.

இருவரும் சிவன் மலைக் கோவிலை அடைந்த போது இருட்டி விட்டது. மருதப்பன் கடைக்கான இடத்தை யும், தான் வசிக்கக் கிடைக்கும் வீட்டையும் பார்த்தான். எல்லாம் அவனுக்குப் பிடித்துப் போயிற்று.



மகாலிங்கம் அவனை தர்மகர்த்தா விடம் அழைத்துச் சென்றார். தர்ம கர்த்தா கூறிய வாடகைக்கு மருதப் பன் ஒப்புக் கொள்ள, அவரும் கடையை நடத்த அனுமதி அளித் தார்.

கோவிலிலிருந்து வெளியே மகா லிங்கமும், மருதப்பனும் வந்தனர். அப்போது அவர் ''நீ இன்றிரவு என் வீட்டில் தங்கிவிட்டு நாளை உன் ஊருக்குப் போகலாம். நீ முன்ன தாகப் போ. நான் கோவில் தர்ம கர்த்தாவிடம் உற்சவ விஷயமாகப் பேச வேண்டி இருக்கிறது. என் வீடு மலை அடிவாரத்தில் பாதை ஆரம் பத்தில் உள்ளது. அங்கு இரண்டு பாதைகள் பிரிகின்றன. நீ இடது புறமுள்ள பாதையில் போ. அங்கு



ஒரே வீட்டைத்தான் காண்பாய். அது தான் என் வீடு'' என்று சொல்லி அனுப்பினர்.

மருதப்பனும் மலை அடிவாரத்திற்கு வந்து இடது புறம் தென் பட்ட பாதையில் நடந்தான். அப் போது திடீரெனப் பெருத்த முழை பிடித்துக் கொள்ளவே அவன் வேக மாக ஓடி அங்கே இருந்த ஒரே பழைய வீட்டை அடைந்தான். வீட்டுக் கதவு மூடப்பட்டிருந்ததால் பலமாகத் தட்டினன். அவன் நாலைந்து முறை தட்டிய பிறகே கதவைத் திறந்து கொண்டு ஒரு கிழவன் வந்தான்.

மருதப்பன் அவனிடம் ''இது தானே அர்ச்சகர் மகாலிங்கத்தின் வீடு?'' என்று கேட்கவே கிழவனும் ''நீ வழி தவறி வந்து விட்டாய். இதற்கு நேர் எதிர் தெருவில் சென் றிருக்க வேண்டும். அங்கே தான் அவர் வீடு இருக்கிறது. சரி. முதலில் நீ உள்ளே வா. வெளியே மழைச் சாரல் அடிக்கிறது'' என்றுன்.

மருதப்பனும் அந்த வீட்டிற்குள் சென்றுன். அப்போது மனதில் ''என் வீட்டிற்கு மகாலிங்கம் வந்த போது அவருக்கு எதுவும் கொடுக் காமல் அனுப்பி விட்டேன். இப் போது அவர் வீட்டிற்குப் போய் அங்கே தங்கினல் எனக்குத் தலை குனிவுதானே. அதனல் இன்றைய் இரவை இங்கேயே கழித்து விடுகி றேன்'' என நினைத்துக் கொண்டான்.

அவன் கிழவனிடம் ''ஒரே மழை யாக இருக்கிறது. இன்றிரவுப் பொழுதை நான் இங்கேயே தங்கிக் கழிக்க நினைக்கிறேன். கொஞ்சம் இடம் கொடுப்பீர்களா?'' என்று கேட்டான்.

கிழவனும் ''எனக்கு ஒரு ஆட் சேபணையும் இல்லை. நீ அந்தக் கட்டிலில் படுத்துக் கொள். நான் இந்த சாய்வு நாற்காலியில் படுத் துக் கொள்கிறேன். எல்லாம் என் தலையெழுத்து இப்படித் தனியாக வாழ வேண்டும் என்று! எனக்கு ஆறு மகன்கள் இருந்தும் அவர் களோடு இருந்து வாழ முடியவில்லை. அநாதை போலக் கிடக் கிறேன் பார்'' என்றுன்.

கிழவன் கண்ணீர் உகுத்தவாறே நள்ளிரவு வரை தன்னைப் பற்றி

மருதப்பனிடம் கூறினுன். இளம் வயதில் அவன் மகா முன்கோபி யாய் மனேவி மக்களிடம் மிகக் கடுமையாக நடந்து கொள்வானும். இதெல்லாம் அவன் நல்ல கட்டுப் பாடு என எண்ணினுனும். யாரிட மும் அவன் அன்புடன் பேசியதே இல்லேயாம். அவனது புதல்வர் கள் பெரியவர்களானதும் வெவ் வேறு இடங்களில் வேலே பார்க்க போய் விட்டார்கள். அவர்களில் யாருக்கும் தந்தை என்ற பாசமே இருக்கவில்லே. கிழவனின் மனேவி யும் இறந்து போகவே அவன் தனி யாகி விட்டான். அவனேப் பார்க் கக் கூட ஒரு மகனும் வரவில்லே யாம்.

கிழவன் இப்படிச் சொல்லி "இதெல்லாம் நானுகச் செய்து கொண்ட வினே. நாம் நம் மனேவி மக்களேப் பரிவுடன் கவனிக்காமல் போனுல் இந்த கதிக்குத்தான் ஆளா கிறேம். அவர்கள் நம்மிடம் அன்பு செலுத்துவார்கள் என்பதை இந் நிலேயில் நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்?" என்றுன்.

இதைக் கேட்ட மருதப்பனின் மனதில் ஒரு புயலே மூண்டது. அவன் எப்போது விடியும் எனக் காத்திருந்தான். அவனே அறியாமல் தூக்கம் அவனேக் கவ்வியது. நன்கு காலேயாகி சூரிய வெளிச்சம் பரவி யது. அப்போது தன்னே யாரோ தட்டி எழுப்பியதை அவன்



உணர்ந்தான்.

அவன் கண் விழித்துப் பார்த்த போது தன்னெதிரே மகாலிங்கம் நிற்பதைக் கண்டான். அவரும் "ராத் திரி முழுவதும் நீ இந்தப் பேய் பிடித்த வீட்டிலா இருந்தாய்? நான் தவறுதலாக வலதுபுறப் பாதை என் பதற்குப் பதில் இடதுபுறப் பாதை என்று கூறி விட்டேன். ராத்திரி முழுவதும் நல்ல மழை. அதனுல் உன்னேத் தேட முடியவில்லே" என்றுர்.

மருதப்பனும் திடுக்கிட்டு "இது ஒரு பேய் வீடா! இங்கே அது ஒன்றும் தென்படவில்லேயே. ஒரு கிழவர்தானே இருந்தார்" என்றுர். மகாலிங்கமும் "கிழவன் ஒல்லியாக உயரமாகத்தானே இருந்தான்? அவ

னது வலது கண்ணின் கீழ் ஒரு மச்சம் கூட இருந்திருக்குமே" என்ருர். "ஆமாம். அவரேதான்" என்ருன் மருதப்பன்.

மகாலிங்கமும் "அவன் இந்த உலகத்தை விட்டுப் போய் பத்து வருடங்களாகி விட்டன. கிழத்தனத்தில் அவனுக்கு உதவ யாரும் இல்லாமல் அநாதையாக இறந்தான். அவன் செய்த கொடுமைக்கு இது போதாது என்று இப்போது பேயாக மாறித் திரிகிருன். இதை ஊரார் சொல்லியும் நான் நம்பவில்லை. நீ அவனைப் பார்த்தாய் என்பதால் இப்போது நம்புகிறேன்" என்ருன்.

மருதப்பன் பதில் பேசவில்லை. ஊருக்குப் போய் ஒரு வாரத்தில் தன் மனைவியை அழைத்துக் கொண்டு சிவன் மலைக் கோவில் வீட்டிற்கு வந்து விட்டான். முத்தம்மாளின் வாழ்க்கை இப்போது மகிழ்ச்சியுடன் கழியலாயிற்று. ஏனெனில் அந்தப் புதிய வீட்டிற்கு வந்த பின் மருதப்பன் முற்றிலும் மாறிவிட்டான். முன்பிருந்த கோபம், கண்டிப்பு, பிடிவாதம் எல்லாம் இப்போது அவனிடம் இல்லை.

ஒருநாள் கோவிலுக்கு வந்த முத்தம்மாளிடம் "இப்போது உன் கணவன் எப்படி இருக்கிருன்? நீ சந்தோஷமாகத்தானே இருக்கிருய்?" என்று கேட்டார் மகாலிங்கம். அவளும் "நான் சந்தோஷமாக இருக்கிறேன். எல்லாம் அந்த சிவனின் செயல்" என்ருள்.

மகாலிங்கம் மனதிற்குள் சிரித்துக் கொண்டார். ஏனெனில் அவர் வேண்டுமென்றே தவருன வழியைக் கூறி அந்தப் பாழடைந்த வீட்டில் சிவன் என்ற நாடகக் காரனை கிழவன் போல வேடம் பூண்டு ஒரு கற்பனைக் கதையைச் சொல்லச் செய்தார். அதை அவர் முத்தம்மாளிடம் கூறவில்லை. ஆனுல் அவள் கூறியது போல அந்த மாற்றம் உண்மையில் சிவன் செயல்தானே!






# இரு கனவுகள்

வெகு காலத்திற்கு முன் பர்மாவில் ஒரு கிராமத்தில் பூமாங் என்ற வட்டிக் கடைக்காரன் இருந்தான். அவனுக்குப் பணம்தான் குறி. வேறு எதைப் பற்றியும் அவன் கவலைப் படவே மாட்டான். ஒருமுறை அவன் நோய் வாய்ப்பட்டுப் படுத்துவிட்டான். இனி தான் உயிர் பிழைக்க முடியுமா என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டு விட்டது.

அதனால் அவன் கோவில் அர்ச்சகரை வரச் சொல்லி அவனிடம் "நீ இந்தக் கோவிலுக்குப் பணிபுரிய வந்து எவ்வளவு காலம் ஆயிற்று?" என்று கேட்டான். அர்ச்சகரும் "எனக்குச் சரியாக நினைவில்லை" என்றார்.

அப்போது அவன் "அர்ச்சகா? உனக்கு இதுவரை கடவுள் மீது பக்தியே இல்லை. அதனால் நீ எந்த மந்திரம் சொன்னாலும் அதற்கு எந்த சக்தியும் இருக்காதே. எனக்கு இந்த வேளையில் உன்னால் பயன் இல்லை நீ போகலாம். நான் வேறு ஒருவரைக் கூப்பிட்டுக் கொள்கிறேன்" என்றான். அர்ச்சகர் பதில் பேசாமல் போய் விட்டார்.

சில நாட்களுக்குப் பின் அந்த வட்டிக் கடைக்காரன் குணமடைந்து விட்டான். ஒரு நாள் அவனைத் தெருவில் கண்ட அர்ச்சகர் ஆச்சரியப்பட்டு "நீங்கள் குணமடைந்து விட்டீர்களா? கடுமையான நோயால் பீடிக்கப்பட்டிருந்தீர்களே. நல்ல மருந்தை யாராவது வைத்தியர் கொடுத்து குணப்படுத்தினாரா?" என்று கேட்டார். அவனும் "நோய் போய் விட்டது. ஆனால் கெட்ட கனவுதான் காண்கிறேன்" என்றான்.

அர்ச்சகரும் "அப்படி என்ன கனவு?" என்று கேட்கவே வட்டிக் கடைக்காரன் கூறலானான்:

—பர்மா நாட்டுப்புறக் கதை—

கனவில் நான் சொர்க்கலோகத்திற்குப் போனேன். அங்குள்ள வாயில் காப்போன் வழிமறித்து "நீ என்றாவது அர்ச்சகர், சாது சன்னியாசிகள் கூறும் பிரசங்கங்களைக் கேட்டிருக்கிறாயா?" என்று கேட்டான். நான் இல்லை என்றதும் அவன் "அப்படியானால் இங்கேயே இரு. சொர்க்கத்திலிருந்து யாராவது ஒருவரை அழைத்து வருகிறேன். அவன் உன்னை ஆசீர்வதித்தால் உன்னை உள்ளே அனுப்புகிறேன்" எனக் கூறிப் போனான்.

சற்று கழித்து அவன் வந்து "நீ துரதிர்ஷ்டசாலி. அங்கே ஒரு சாதுவோ அல்லது அர்ச்சகரோ யாரும் இல்லை" என்றான்.

இப்படி வட்டிக் கடைக்காரன் கூறியதும் அர்ச்சகர் கோபித்துக் கொண்டு போய் விட்டார். இந்தக் கனவு பற்றி அவர் கிராம அதிகாரியிடம் கூறினார். அவன் வட்டிக் கடைக்காரனைக் கூப்பிட்டு அர்ச்சகரிடம் கூறிய கெட்ட கனவு பற்றி விசாரித்தான். வட்டிக் வியாபாரிக்கு கிராம அதிகாரியைக் கண்டால் பிடிக்காது. அதனால் அவன் "நான் இன்னொரு கெட்ட கனவும் கண்டேன். அதைக் கூறுகிறேன்" என்றான்.

"கனவில் நான் நரகலோகத்திற்குப் போனேன். அங்கு கதவு திறந்திருந்தது. மறுபுறம் அர்ச்சகர்களும் சாது சன்னியாசிகளும் இருந்தார்கள். நான் களைத்துப் போனதால் அங்கே இருந்த ஒரு முக்காலி மீது உட்காரப் போனேன். அப்போது எமகிங்கரன் ஒருவன் ஓடி வந்து "இது உனக்கல்ல. உன் கிராமத்து அதிகாரிக்கே அவன்தான் இங்கே இருக்கலாம். உங்களுக்கு எல்லாம் இங்கே இடம் இல்லை" என்று கூறி என்னைத் துரத்தி விட்டான்" என்றான்.

இவ்வாறு வட்டிக் கடைக்காரன் கூறியதும் கிராம அதிகாரி கோபத்தோடு அவனைப் பார்த்து உடனே விரட்டியும் விட்டான்.





# நீண்ட வாழ்வு

தேவலோக இந்திரன் பூலோக வாசிகளை எப்படிச் சுகமாக வாழ வைப்பது என்று யோசித்தான். நீண்ட யோசனைக்குப்பின் ஏழு நட்சத்திரங்களைத் தன் முன் வரச் சொன்னான். அவை நன்றாக வான வெளியில் நின்றபோது ஒரே ஒளி மயமாக இருந்தது. அது கண்டு பூஉலக மக்கள் ஆச்சரியம் அடைந்தார்கள்.

நட்சத்திரங்கள் தேவேந்திரனை வணங்கி நிற்கவே அவனும் "பூலோக வாசிகளை சுகமாக வாழ வைக்க விரும்புகிறேன். அதற்காக அவர்களுக்குச் சிலவற்றை அளிக்க வேண்டும். எதையும் யாருக்கும் இனாமாகக் கொடுத்தால் அதற்கு மதிப்பு இராது. எனவே நான் உங்களிடம் கொடுக்கும் பொருள்களை அவர்களிடம் சரியான விலைக்கு விற்று வரவேண்டும்" என்றான்.

அவர்களும் அவனது உத்தரவுப்படி நடப்பதாகக் கூறவே தேவேந்திரனும் ஒரு தங்கச் சிமிழை எடுத்து முதல் நட்சத்திரத்திடம் கொடுத்து "இது நகைச்சுவை ரசம். இதை அருந்துபவர்கள் சிரித்துக் கொண்டே வாழலாம்" என்றான். பிறகு இரண்டாவது நட்சத்திரத்திடம் ஒரு சிமிழைக் கொடுத்து "இது நன்னடத்தை ரசம். இதனை அருந்துபவர்கள் நேர்மையானவர்களாக இருப்பார்கள்" என்றான். மூன்றாவது நட்சத்திரத்திடம் ஒரு சிமிழைக் கொடுத்து "இது ஆரோக்கிய ரசம். இதை அருந்துபவர்கள் நன்கு ஆரோக்கியமாக இருப்பார்கள்" என்றான்.

நான்காவது நட்சத்திரத்திடம் ஒரு சிமிழைக் கொடுத்து "இது நீண்ட ஆயுளைத் தரும் ரசம். இதனைப் பருகுபவர்கள் நீண்ட காலம்

-காரை. குருமூர்த்தி-

வாழ்வார்கள்" என்றான். அதுபோல ஐந்தாவது நட்சத்திரத்திடம் ஒரு சிமிழைக் கொடுத்து "இது புகழ் ரசம். இதனைப் பருகுபவர்கள் புகழை அடைவார்கள்" என்றான். ஆறாவது நட்சத்திரத்திடம் ஒரு சிமிழைக் கொடுத்து "இது ஆனந்த ரசம். இதனைச் சாப்பிடுவோர் ஆனந்தமாக வாழ்க்கை நடத்துவார்கள்" என்றான். ஏழாவது நட்சத்திரத்திடம் ஒரு சிமிழைக் கொடுத்து "இது தனரசம். இதனைப் பருகுபவர்களுக்கு நிறையப் பணம் கிடைக்கும்" என்றான்.

அந்த ஏழு நட்சத்திரங்களும் தத்தம் சிமிழ்களோடு பூலோகத்திற்கு வந்து அவை பெண்களாக மாறிதாம் கொண்டு வந்த ரசங்களை விற்க முயன்றன. முதல் மூன்று நட்சத்திரங்களின் ரசங்களை வாங்குவோரே இல்லை. நான்காவது நட்சத்திரத்தின் ரசத்தை வாங்கப் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள்.

அப்போது நான்காவது நட்சத்திரம் "என் தமக்கைகளும் தங்கைகளும் விற்கும் ரசங்களை வாங்கினாலே உங்களுக்கு இந்த நீண்ட வாழ்வு தரும் ரசம் பயன்படும். அவற்றை வாங்கி விட்டீர்களா?" என்று கேட்டது. மக்களும் "இல்லையே" என்றார்கள்.

"நான் இந்த ரசச் சிமிழைத் திறந்துவிட்டேன். இதனை யாருக்காவது நான் கொடுத்தாக வேண்டும். எனவே இதனை அந்த மரத்தில் உட்கார்ந்திருக்கும் ஆண் கிளிக்குக் கொடுக்கிறேன். அது நீண்ட காலம் உயிர் வாழும்" எனக் கூறி நான்காவது நட்சத்திரம் தன் சிமிழில் உள்ள ரசத்தை அந்தக் கிளிக்குக் கொடுத்தது.

அந்த ஆண் கிளியும் தன் அலகால் அந்த நீண்ட வாழ்வு தரும் ரசத்தைப் பருகியது. அதனால்தான் ஆண்கிளி முன்னூறு ஆண்டுகளுக்கு மேலாக உயிர் வாழ்கிறது என்று கூறுகிறார்கள்.



# இயற்கை விநோதங்கள்







## பறவை உபயோகிக்கும் கருவி



பசிபிக் மகா சமுத்திரத்திலுள்ள காலாபா கோஸ்தி விலுள்ள மரங்கொத்தி கள் மரங்களில் உள்ள புழு பூச்சிகளைக் கொத்தித் தின்ன ஒரு வகை. நாணல் தட்டைக் கருவியாகப் பயன்படுத்தி கொத்துகின்றன.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

**சந்தாத் தொகை (ஆண்டிற்கு)**

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 81.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 156.00

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு. கே, யு. எஸ். ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 87.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 156.00

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி**

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும்**



K. Padmanabha



Devidas Kasbekar

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஏப்ரல் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

## பிப்ரவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **ஆசையாய் அலங்கரிக்கும் மலர்க்கரம்**
இரண்டாவது போட்டோ : **அன்பாய் அரவணைக்கும் தளிர்க்கரம்**

பரிசு பெற்றவர் : **கே. எஸ். நிர்மலா, திருச்சி-14**

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# Cuddles always say "I love you."

Show your little ones how much you love them! And is there a better way of doing that than giving them a huggable, cuddlable playmate?

Cuddles. From the people who have given children the delightful entertainer of a magazine, Chandamama. Cuddles. A whole new range of stuffed toys. And, your old favourites. And, cute surprises being introduced regularly. Each one a sweet, adorable companion to your child. Absolutely safe. Designed to withstand childhandling.

Well, the fun and excitement of the festive season is just round the corner. Make it memorable for your child with a special gesture. With a Cuddle.

- CUDDLES — Stuffed toys from Chandamama.
- SAMMO — Mechanical and electronic toys from Chandamama

I♥U

## CUDDLES

Manufactured in technical collaboration with Sammo Corporation. South Korea

**CHANDAMAMA TOYTRONIX**

Chandamama Toytronix Private Limited, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026

*from*

**THE HOUSE OF**

**CHANDAMAMA**

Mudra:M:CTPL 4274

**CUDDLES AND SAMMO TOYS WILL BE AVAILABLE AT ALL LEADING TOY OUTLETS EXCEPT IN THE STATES OF ASSAM, HIMACHAL PRADESH, MADHYA PRADESH AND NORTH EASTERN STATES**

தேங்காய்
இனிமை
மிட்டாய்க்குள்
கடித்தால் இன்பம்
வாய்க்குள்




nutrine
COOKIES




குழந்தைகள்
கோலாகலத்துடன் கூவுவர்
கோகாநாக குக்கீஸ்




Visesh NC 9090/Tam